Bibliographic Record Target

*குமரன் = Kumaran. -- ஆரம் 1, முத்து 1 (Aug. 22, 1923)- . –*
*காரைக்குடி : குமரன் அச்சுக்கூடம், 1923-*
*v. : ill. ; 34-44 cm.*
*Weekly.*
*In Tamil.*
*Editor: சொ. முருகப்பசெட்டியார்*
*Record No. 313*

*Kumaraṉ = Kumaran. -- Āram 1, muttu 1 (Aug. 22, 1923)- . –*
*Kāraikkuṭi : Kumaraṉ Accukkūṭam, 1923-*
*v. : ill. ; 34-44 cm.*
*Weekly.*
*In Tamil.*
*Editor: Co. Murukappaceṭṭiyār*
*Record No. 313*

35 mm microfilm

Image placement: IA (IIA) IB IIB

Date filming began: 28 January, 2009

# List of issues filmed

## குமரன்

*ஆரம் 13, முத்து 1 (Sept. 05, 1935)*
*ஆரம் 13, முத்து 2 (Sept. 12, 1935)*
*ஆரம் 13, முத்து 3 (Sept. 19, 1935)*
*ஆரம் 13, முத்து 4 (Sept. 26, 1935)*
*ஆரம் 13, முத்து 5 (Oct. 03, 1935)*
*ஆரம் 13, முத்து 6 (Oct. 10, 1935)*
*ஆரம் 13, முத்து 7 (Oct. 17, 1935)*
*ஆரம் 13, முத்து 8 (Oct. 24, 1935)*
*ஆரம் 13, முத்து 9 (Oct. 31, 1935)*
*ஆரம் 13, முத்து 10 (Nov. 07, 1935)*
*ஆரம் 13, முத்து 11 (Nov. 14, 1935)*
*ஆரம் 13, முத்து 12 (Nov. 21, 1935)*
*ஆரம் 13, முத்து 13 (Nov. 28, 1935)*
*ஆரம் 13, முத்து 14 (Dec. 05, 1935)*
*ஆரம் 13, முத்து 15 (Dec. 12, 1935)*
*ஆரம் 13, முத்து 16 (Dec. 19, 1935)*

*Continued ...*

ஆரம் 13, முத்து 17 (Dec. 26, 1935)
ஆரம் 13, முத்து 18 (Jan. 02, 1936)
ஆரம் 13, முத்து 19 (Jan. 09, 1936)
ஆரம் 13, முத்து 20 (Jan. 23, 1936)
ஆரம் 13, முத்து 21 (Jan. 30, 1936)
ஆரம் 13, முத்து 22 (Feb. 06, 1936)
ஆரம் 13, முத்து 23 (Feb. 13, 1936)
ஆரம் 13, முத்து 24 (Feb. 20, 1936)
ஆரம் 13, முத்து 25 (Feb. 27, 1936)
ஆரம் 13, முத்து 26 (Mar. 05, 1936)
ஆரம் 13, முத்து 27 (Mar. 12, 1936)
ஆரம் 13, முத்து 28 (Mar. 19, 1936)
ஆரம் 13, முத்து 29 (Mar. 26, 1936)
ஆரம் 13, முத்து 30 (Apr. 02, 1936)
ஆரம் 13, முத்து 31 (Apr. 09, 1936)
ஆரம் 13, முத்து 32 (Apr. 16, 1936)
ஆரம் 13, முத்து 33 (Apr. 23, 1936)
ஆரம் 13, முத்து 34 (Apr. 30, 1936)
ஆரம் 13, முத்து 35 (May 07, 1936)

*Continued ...*

*ஆரம் 13, முத்து 36 (May 14, 1936)*

*ஆரம் 13, முத்து 37 (May 21, 1936)*

*ஆரம் 13, முத்து 38 (May 28, 1936)*

*ஆரம் 13, முத்து 39 (June 04, 1936)*

*ஆரம் 13, முத்து 40 (June 11, 1936)*

*ஆரம் 13, முத்து 41 (June 18, 1936)*

*ஆரம் 13, முத்து 42 (June 25, 1936)*

*ஆரம் 13, முத்து 43 (July 02, 1936)*

*ஆரம் 13, முத்து 44 (July 09, 1936)*

*ஆரம் 13, முத்து 45 (July 16, 1936)*

*ஆரம் 13, முத்து 46 (July 23, 1936)*

*ஆரம் 13, முத்து 47 (July 30, 1936)*

*Kumara<u>n</u>*

*Āram 13, muttu 1*

*September 05, 1935*

Record no. 313

REG. NO. M. 1823. | 12 பக்கங்கள். | [illegible] WEEKLY.

சந்தா விவரம்.

உள்ளூர் வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன், பர்மா வருஷம் ஒன்றுக்கு ரூ. 6-0-0
மலாய் முதலிய வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 7-0-0

விளம்பரம்.

# குமரன்

(மாதப்பதிப்பும் சேர்ந்தது.)

வியாழன் தோறும் வெளிவரும்

PUBLISHED EVERY THURSDAY

ஆசிரியர்:— சொ. முருகப்பா.

ஆரம் 13. | காரைக்குடி, யுவ-ஹு ஆவணி-மீ 20-உ (5—9—35.) | முத்து 1.



வியாபாரத்திற் கழகு விளம்பரமே

## திருப்பத்தூர் பஞ்சாயத்து போர்டு

### தேர்தல் வழக்கில் ஹைக்கோர்ட்டு உத்திரவு.

திருப்பத்தூர் 8 வார்டுக்கு அங்கத்தினராயிருந்து வந்த திரு. ச. பீ. ந. மு. முகம்மது இப்ராகிம் ராவுத்தர் அவர்களின் தேர்தல் செல்லாதென்றும் மேற்கூறிய பஞ்சாயத்து போர்டில் ஷெயார் அங்கம் வகிக்கக் கூடாதென்றும் திருப்பத்தூர் திரு. பிரான்மலை ராவுத்தர் ஹைக்கோர்ட்டில் மனுச் செய்து கொண்டு தற்காலிக ஸ்டே ஆர்டரும் வாங்கியிருந்த விஷயம் நமது வாசகர்களுக்கு முன்பே அறிவிக்கப்பட்டிருக்கிறது.

திரு. முகம்மது இப்ராகிம் ராவுத்தரவர்கள் செய்த அப்பீலின்மீது ஜஸ்டிட் ஸ்டோடார்ட் அவர்கள் இரு தரப்பு வக்கீல்களின் வாதங்களையும் கேட்ட பின்னர் திரு. முகம்மது இப்ராகிம் ராவுத்தர் அவர்கள்தான் அங்கத்தினராயிருக்க அருகதையுடையவரென்றும் ஸ்டே ஆர்டரை ரத்துச் செய்வதாகவும் ஆகஸ்டு 30ந்தேதி யன்று தீர்ப்புக்கூறி, செலவு தொகையும் கொடுக்கும்படி உத்தரவிட்டார்கள்.

### பெண்ணின் மர்மஸ்தானத்தில் திராவகம்

#### எதிரிகள் தண்டிக்கப் பெற்றனர்

ஒய்யக்கொண்டான் சிறுவயல் சோலையன் ஆசாமிகள் அழகப்பன் துரைசாமி மகன் 17 வயதுள்ள இருதயம் என்ற பெண்ணை பலவந்தப் படுத்தி கீழே தள்ளி எரியும் கொடுந் தன்மையுள்ள ஒரு வகை திராவகத்தை மர்மஸ்தானத்தில் ஊற்றி அவளது தலை மயிரைக் கத்தரித்ததாகக் காரைக்குடிப் போலீசாரால் தொடுக்கப் பெற்ற வழக்கு விபரம் முன்பு நமது குமரனில் வெளியாகியிருக்கிறது.

அவ்வழக்கில் முடிவு கூறுகையில் திருப்பத்தூர் சப் மாஜிஸ்டிரேட் அவர்கள் ஆகஸ்டு 27-ந் தேதியன்று எதிரிகளுக்குத் தலா 3 மாதத்தண்டனை விதித்தார்கள்.

### "ஆனந்தவிகடன்" மீது நடவடிக்கை இல்லை

"ஆனந்தவிகடன்" பத்திரிகையில் ஏசுநாதரைப்பற்றி அவமதிப்பாகக் கூறும் ஒரு கட்டுரை வெளியானதாகக் கூறி அதன் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று சில கத்தோலிக்கர்கள் கவர்மெண்டைக் கேட்டுக் கொண்டதின் பேரில் சென்னை சட்டசபையில் கேள்வி கேட்கப்பட்டது. அக்கட்டுரையின் ஆங்கில மொழி பெயர்ப்பைக் கேட்டிருப்பதாயும் அதனைப் பார்த்துவிட்டு யோசிப்பதாகவும் ஹோம் மெம்பர் பதில் கூறினர்.

இப்போது கவர்மெண்டார் ஆனந்தவிகடன் மீது மேற்குறித்த விஷயத்திற்காக ஒரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை யென்று முடிவு செய்து விட்டதாகத் தெரிகிறது.



## கவனிக்கவேண்டிய சமயமிதுதான்

சக்குரும்பை திரு. பெ. நா. மு. முத்துப்பழநியப்ப செட்டியார் ஜே. பி. அவர்கள் சகோதரப் பத்திரிகை யொன்றில் பின்வருமாறு எழுதுகிறார்கள்:—

தனவணிக சமூகத்தார் முற்காலத்தில் வியாபாரத்தையே முக்கியத் தொழிலாக நடத்தி வந்தார்கள். ஐம்பது ஆண்டுகட்கு இடையில் மேற்சொல்லிய வியாபாரத்தை ஒதுக்கி விட்டு ரொக்க லேவாதேவியை ஆரம்பித்து அதை விரிவாக நடத்திவந்தார்கள். 1925 ஆண்டிலிருந்து ரொக்க லேவாதேவிக்குப் பலப்பல இடையூறுகள் ஏற்பட்டு 1935 ல் ரொக்க லேவாதேவித் தொழிலை நிறுத்திக் கொள்வது நலமென்று நினைக்கும்படியாக விருப்பதால் இனி ஆதியில் நடத்திவந்தபடி சொந்தமாகவும் கூட்டுக் கம்பெனிகளாகவும் ஏற்படுத்தி அவரவர் மனதுக்கிசைந்த முதல் செய்துவந்தால் நமது வியாபாரம் குன்றின் சிகர தீபம்போல் பிரகாசித்து வளருமென்பதில் ஐயுற வேண்டுவதில்லை.

இன்னும் இஞ்சினியர் வேலை, எலக்ட்ரிக் வேலை, வைத்தியம் இவைகளில் தேர்ச்சியடைந்து போதிய நற்சாட்சிப் பத்திரத்துடன் வேலை யமையாமலிருக்கும் தனவணிகர்களை கம்பெனியில் பங்காளியாகச் சேர்த்து அவரவர்கள் தொழிலுக்கு வேண்டிய பொருளை உதவி செய்து கவர்ன்மெண்டிலோ பிரைவேட்டிலோ பெரும் கண்ட்ராக்டுகளை லாபம் கிடைக்கக் கூடியதாக ஒப்புக்கொண்டு வேலை செய்யச் சொல்வதும் ஒரு வியாபாரமே. இன்னும் எத்தனையோ பலப்பல வியாபாரங்களிருக்கின்றன. ஒன்றில் புகுந்து விட்டால் பிறகு எல்லாவற்றையும் தானே தெரிந்து கொள்ளக் கூடிய சக்தி வந்து விடும்.

பள்ளத்தூர் திருவாளர் உ. அ. உ. க. ராம. அரு. அருணசலம் செட்டியாரவர்கள் மறுமுறையும் 20-8-35ல் கௌரவ மாஜிஸ்டிரேட்டாக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

வியாபாரங்களில் புகுந்து நல்ல முறையில் நடத்தி வந்தால் நம்மிடம் கடன் வாங்கியவர்கள் மேற்படி கடனைத் தந்து தீர்க்கும் வரையிலும் அவர்கள் கேள்வி கேட்கும் போதெல்லாம் அதிக நாள் தாமதியாமல் எழுத்து மூலம் பிரதி உத்தரம் சொல்லிக் கொண்டிருக்க வேண்டிய ஜோலியும் நீங்கி அரசாங்கத்தாருக்கு நல்லவர்களாகவுமிருந்து லாபத்தையும் பெறலாம்.

இப்பொழுது தனவணிக சமூகத்தாரில் அநேகர் ராஜாங்கப் பாஷையில் தெளிவுள்ளவர்களாக இருப்பதால் அவர்களில் வியாபாரத்தன்மை அறிந்த நிபுணர்களை மேல்நாடுகளுக்கு அனுப்பி மலாயா பர்மா இந்தியா பகுதிக்குப் பிடித்த சரக்குகளை நேரில் ஒப்பந்தம் செய்து குறித்த குறித்த தேசங்களுக்கு அனுப்பச் செய்து அவைகளை 10 பர்சன்டு லாபத்திற்கு விற்று பதினைந்து வருடத்திற்கு முன் மலாய் நாட்டில் ஊருக்கு இரண்டொரு மளிகைக் கடையும் நான்கு ஜவுளிக்கடையுமிருந்தன. இப்பொழுது அளவுக்கு அதிகமான மளிகைக் கடை, ஜவுளிக்கடை, நெய்க் கடை, எண்ணெய்க்கடை, புகையிலைக் கடை, சுருட்டுக்கடை, வத்தல் கடை, புஸ்தகக் கடை வாசனைத் திரவியக் கடை கிராமபோன் பிளேட்டுக் கடை இன்னும் பலவகையாக எண்ணிக்கையிட வியலாத கடைகளிருக்கின்றன.

மேற்கூறிய கடைகளில் சுமார் மூன்றிலொரு பாகமுள்ள சாமான்கள் தனவணிக சமூகத்தாரே வாங்குகிறார்களென்று ஊகிக்கப் படுகிறது. அறிவாளிகள் காலத்திற்குத்தக்கபடி நடந்துகொள்ள வேண்டியது முக்கிய அம்சமாகையால் நமது தனவணிக சமூகத்தாரவர்களிருந்துவரும் நாடுகளில் அந்நாட்டுக்குத் தகுந்த வியாபாரத்தை நடத்தி நல்ல இலாபத்தைப் பெறுவதற்குத் தாமதியாமல் ஆரம்பிக்க வேணுமென்று நமது குகப் பெருமானைப் பிரார்த்திக்கின்றேன்.



## பார்ப்பனர்—தீயர் திருமணம்

### திருச்சியில் ஒரு விநோத வழக்கு

திருச்சி ஜில்லா முன்சீப் கோர்ட்டில் சுகுந்த குந்தளாம்பாள் என்னும் ஸ்திரீ தன் கணவன் விஸ்வநாதய்யர் பேரிலும் அவர் புதிதாக சிவில் விவாகச் சட்டப்படி கலியாணம் செய்துகொண்டிருக்கும் தீய வகுப்பைச்சேர்ந்த ஸ்ரீ தேவி அல்லது ராதா பாய் என்பவள் பேரிலும் ஒரு தாவா தொடர்ந்திருக்கிறாள்.

தன்புருஷன் ஸ்ரீ தேவியைக் கலியாணம் செய்து கொண்டது முதல் தன்னை ஹிம்சை செய்துவந்ததாயும் தன் நகை எல்லாவற்றையும் அவளுக்குப் போட்டு விட்டதாயும் ஒரே வீட்டிலிருந்துகொண்டு தன் மதத்தையும் நடத்தையையும் பங்கப்படுத்தியதாகவும் அவள் கூறினாள்.

ஐயர் தனது ஸ்டேட்மெண்டில் தான் அவளை யாதொரு துன்பத்திற்கும் ஆளாக்கவில்லை யென்றும் தான் தீயவகுப்பை சேர்ந்தவர்களைக் கலியாணம் செய்துகொண்ட காரணத்தினாலே அவள் ஜீவனாம்சம் கேட்பது நியாயமில்லை யென்றும் வாதாடினார்.

பிரதிவாதி துன்பம் செய்தது வாஸ்தவமென்றும் ஒரு பிராமணன் தீயவகுப்பை சேர்ந்த பெண்ணை மணந்தால் அது ஹிந்துச் சட்டப்படி செல்லாதென்றும் ஸிவில் சட்டப்படியும் ஒரு மனைவி இருக்கும் பொழுது மற்றொருவளைக் கட்டிக்கொண்டால் கலியாணம் செல்லாதென்றும் ஸ்ரீ தேவியை வைப்பாட்டி யென்றே கருத வேண்டுமென்றும் மனைவிக்குப் புருஷன் மாதம் 25 ரூபா கொடுக்க வேண்டுமென்றும், இதுவரை நடந்த மாதங்களுக்கு மாதம் 20 ரூபா வீதம் கொடுக்கவேண்டுமென்றும் அவளிடமிருந்து எடுத்த நகைகளின் விலையையும் திருப்பிக்கொடுக்கவும் உத்திரவிட்டார்.

### ஒரு தேநீர் விருந்து

28-8-35ந் தேதியன்று ஞாயிற்றுக் கிழமை மாலை திருக்கோஷ்டியூர் நேட்டிவ் டாக்டர் திரு. நமச்சிவாயம் அவர்களால் கண்டனூர் பெஞ்சு கோர்ட்டுப் பிரசிடெண்டான திரு ராம. நா. நா. மு. நாச்சியப்ப செட்டியாரவர்களுக்கு சிறந்த தேநீர் விருந்தொன்று நடாத்தப் பெற்றது.



## மலாய் நாட்டுச் செய்திகள்.

### மலாய் நாட்டில் இந்தியர் நிலம்

#### ரப்பர்ச் செய்திகள்

(நமது நிருபர் ஏர்மெயில்)

இண்டர் நேஷனல் ரப்பர் கமிட்டியார் வெளியிட்டுள்ள புள்ளி விபரங்களிலிருந்து 1925-ம் வருஷம் உலகில் 557847 டன் ரப்பர் விற்பனையானதாகவும், 1934-ம் வருஷத்தில் 925066 டன் விற்பனையானதாகவும் தெரிகிறது. அதாவது சராசரி வருடமொன்றுக்கு 36771 டன் அதிகப்பட்டிருக்கிறது. ஆனால் உலக ரப்பர் உற்பத்தி 51000 டன் வீதம் அதிகரித்துவருகின்றதென்பது கவனிக்கத்தக்க விஷயம்.

* * *

இவ்வருடப் பிற்பகுதி 6 மாதங்களில் மலாயா, சிலோன், இந்தியா டச்சுக்கிழக் கிந்தியத் தீவுகள், பர்மா வடபோர்னியோ சாரவாக் முதலிய நாடுகளிலிருந்து 361000 டன் ரப்பர் ஏற்றுமதியாக்கப் படலாமென்று அகில உலக ரப்பர்க் கமிட்டியாரின் அறிக்கை கூறுகிறது. அதில் மலாயாவிலிருந்து 200500 டன் ரப்பரும், சிலோனிலிருந்து 29000 டன்னும் இந்தியாவிலிருந்து 8500 டன்னும், டச்சுக்கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்து 113000 டன்னும் ஏற்றுமதி செய்யக்கூடும்.

* * *

ரப்பர்க் கட்டுப்பாட்டுத் திட்டத்தையும் தங்கத் திட்டத்தையும்ஆதரிக்கின்றவரான டாக்டர் காலிஞ் என்பவர் ஆலந்து தேசத்தின் மந்திரியாக மறுபடியும் வந்துவிட்டபடியால் ரப்பர் மார்க்கெட் விருத்தியடையக் கூடுமென்று நம்பப்படுகிறது.

* * *

உலகத்தில் ரப்பர்க் கட்டுப்பாடுகட்கு உட்பட்ட தேசங்களிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட வேண்டிய ரப்பரின் அளவு 388962 டன். ஆனால் ஏற்றுமதி செய்யப்பட்ட ரப்பரின் அளவு 388671 டன் தான். இதில் இந்தியாவில் 699 டன் குறைவாக ஏற்றுமதி செய்யப்பட்டது.

* * *

ஜூலை மாதம் 31-ந் தேதியன்று எஸ். எஸ்ஸைச் சேர்ந்த நாடுகளில் உள்ள வியாபாரிகளிடத்திலும் கப்பல் துறைமுகங்களிலும் 46457 டன் ரப்பர் இருப்பு இருந்ததாகத் தெரிகிறது. அதில் சிங்கப்பூரில் 31829 டன்னும் பினாங்கில் 9437 டன்னும் ப்ரோவின்ஸ் வெல்லஸ்லியில் 2407 டன்னும் மலாக்காவில் 2724 டன்னும் இருந்ததென்று தெரிகிறது.

* * *

இண்டர் நாஷனல் ரப்பர்க் கமிட்டியின் மெம்பரான திரு. லோவங்கர் சமீபத்தில் சிங்கப்பூரில் பேசிய போது குறிப்பிட்டதாவது:— கட்டுப் பாட்டுத் திட்டத்தை யனுசரித்து மலாய் நாட்டில் ரப்பர் வாங்கிச் செலவழிக்கும் பேர்வழிகள்மலாய் நாட்டுக்கு வருடமொன்றுக்கு ஒரு கோடி பவுன் வீதம் அனுப்புகின்றார்கள். இதில் சுமார் 20 லட்சம் பவுன் டிவிடெண்டு முதலியவற்றிற்குச் செல்லாகி விட்டாலும் 80 லட்சம் பவுன் மலாய் நாட்டைச் சேர்ந்து விடுகிறது. அதாவது மலாயாவில் வசிக்கும் ஒவ்வொரு ஆண் அல்லது பெண்ணுக்கும் 2 பவுன் வீதம் கிடைக்கிறது. அடுத்த 12 மாதங்களில் உலக ரப்பர் இருப்பில் 20000 டன் குறைவேற்படக்கூடுமாம்.

### ஜோகூர் ஸ்டேட் விடுமுறை

ஜோகூர் சுல்தான் அவர்களின் 63-வது பிறந்தினக் கொண்டாட்டத்தை முன்னிட்டும் அவர் சிம்மாசனமேறிய 40-ம் வருடக் கொண்டாட்டத்தை முன்னிட்டும் நாளது செப்டம்பர் 17, 18, 19-ம்தேதிகள் பொதுவிடு முறைநாட்களாக பாவிக்கப்படும்.

### சங்கத்தின் அறிவிப்பு

சென்ற இரண்டு மூன்று கப்பல்களாக நாகை கஸ்டம்ஸ் ஆபீஸில் ஜப்பான் துணிகளுக்கும், நகைகளுக்கும் அதிகத்தீர்வை போடுவதாகவும் இதனால் அதிகமான சிரமங்கள் ஏற்படுவதாகவும் சில அன்பர்கள் கூறுவதால் மலாய்நாட்டிலிருந்து தாய்நாட்டிற்குப் பிரயாணமாகும் அன்பர்கள் அதிக சாமான்களைக் கொண்டுபோகாமல் இருப்பது நல்லதென்று பினாங்கு செட்டியார்கள் சங்கக்காரியதரிசி ஒரு சுற்றறிக்கை விடுத்திருக்கிறாரென்று தெரிகிறது.

### மலாய் நாட்டில் இந்தியர் நிலம்

ஸ்டிரெய்ட்ஸ் செட்டில் மெண்டில் இந்தியர்களுக்குச் சொந்தமாக 37877 ஏக்கர்கள் கொண்ட தோட்டங்களிருப்பதாகவும், பேரா, சிலாங்கூர், நெகிரி செம்பிலான், பாகாங், ஜோகூர் முதலிய இடங்களில் முறையே 80724, 30818,26050,16219,48863 ஏக்கர்கள் கொண்ட தோட்டங்கள் இருப்பதாகவும் தெரிகிறது.

### மலாய்நாட்டில் ஈயக் கோட்டா

இண்டர் நாஷனல் ஈயக்கமிட்டியார் ஜூலை மாதம் முதல் தேதியிலிருந்து 15 பர்செண்டு அதிகமாக கோட்டா விகிதத்தை அனுமதித்திருப்பதால் இதேகாலத்தில் எப். எம். எஸ். உள்நாட்டுக் கோட்டாவை 46·7 பர்சாண்டாகத் தீர்மானித்திருக்கிறார்கள்.

### ரப்பர் நில விற்பனை

மெஸர்ஸ் சிங்கெல்லீ கம்பெனியார் மலாக்காவிலுள்ள ரப்பர் நிலத்தை விற்றதனால் 6770 வெள்ளி வசூல் செய்தனர்.

திரு. எஸ். டி. வி. இ. வைரவன் செட்டியாரவர்கள் பாயாரம் புட்டியில் எஸ். ஜி. 2,516 லுள்ள 14 ஏக்கர் 26 போல் விஸ்தீரணமுள்ள ரப்பர் நிலத்தை 1600 வெள்ளிக்கு வாங்கினர்.

### ரப்பர் விலை. சிங்கப்பூர்

| | | |
|---|---|---|
| ஆகஸ்டு 20உ | $ | 25—50 |
| 21உ | ,, | 25—67 |
| 22உ | ,, | 25—83 |
| 23உ | ,, | 26—00 |
| 24உ | ,, | 26—00 |
| 26உ | ,, | 25—83 |
| 27உ | ,, | 25—83 |

## ஒரு மன்னிப்பு

ஆவணி 6-ந்தேதி வெளியான கோலாலம்பூர் தமிழ்நேசன் பத்திரிகையில் ஏ. ரெங்கம் என்பவர் எழுதியிருப்பதாவது:—

மகா-ா-ா-ஸ்ரீ அ. மு. மு. முருகப்ப செட்டியாரை நிந்தனைக்குட்படுத்தும்படியான விஷயமடங்கிய ஒரு கேஸ் சிப்பாங் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் நடந்ததாக 1935ம் வருஷம் மே மாதம் 15ந்தேதி 'மலாய் மெயில்' பேப்பரில் பிரசுரிக்கப்பட்டிருந்தது. இந்தக் கேஸ் சம்பந்தப்பட்ட தகவல்கள் என்னால் கிள்ளானிலுள்ள 'மலாய் மெயில்' நிருபருக்கு தெரிவிக்கப்பட்டன. இந்தியன் இமிகிரேஷன் பண்டை ஏமாற்றும் நோக்கத்துடனே உண்மையற்றதும் அறை குறையானதுமான கணக்குகளை சமர்ப்பித்ததாக அவர்மேல் குற்றம் சாட்டப்பட்டு அவர் தானே நேரில் கோர்ட்டுக்கு ஆஜரானதாகவும் வரையப்பட்டிருந்ததுமன்றி அவர் இன்னும் சில குற்றங்களும் சாட்டப்பட்டு குற்றங்களை ஒப்புக்கொண்டார் எனவும் கூறப்பட்டிருந்தது.

ஆகவே சிப்பாங் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் மகா-ா-ா-ஸ்ரீ அ. மு. மு. முருகப்ப செட்டியார் ஆஜராகவில்லை என்றும் அவர் ஒரு குற்றமும் ஒப்புக்கொள்ளவில்லை என்றும் இந்தியன் இமிகிரேஷன் பண்டை ஏமாற்ற எண்ணங்கொண்ட குற்றம் அவர்மேல் சாட்டப்படவில்லை என்றும் நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அப்படி நேர்ந்ததற்குக் காரணம் நானும் கிள்ளான் 'மலாய் மெயில்' நிருபரும் ஒருவருக்கொருவர் கருத்தை சரியாக உணராததே என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மகா-ா-ா-ஸ்ரீ அ. மு. மு. முருகப்ப செட்டியாரை நிந்தை செய்யுமாறு ஒரு வார்த்தையாவது நான் ஒரு காலத்திலும் சொல்லவில்லை என்றும் அதற்கு மாறுபட அபிப்பிராயப்படும்படி நான் முன் சொன்னபடி நானும் 'மலாய் மெயில்' நிருபரும் ஒருவரையொருவர் சரியாய் அறிந்துகொள்ளாததனால் ஏற்பட்ட சம்பவத்திற்கு என் உண்மையான வருத்தத்தை தெரிவித்துக்கொள்வதுடன் அவரிடம் மன்னிப்பையும் கேட்டுக்கொள்ளுகிறேன்

ஏ. ரேங்கம்.

---

### புதுவயல்.

ஸ்ரீமதி வை. மு.
கோதைநாயகி அம்மாள் அவர்கள்
விஜயம்.

(ஒரு நிருபர்)

இந்நகர் ஸ்ரீ சரஸ்வதி சங்கத்தின் 14வது ஆண்டு 4வது மாதக் கூட்டம் நாளது ஆவணித் திங்கள் 3-ம் நாள் மாலை 5 மணி முதல் சென்னை ஜகன் மோகினி ஆசிரியரான ஸ்ரீமதி வை. மு. கோதைநாயகி அம்மாள் தலைமையில் நடந்தது ஸ்ரீசரஸ்வதி வித்தியாசாலை மாணவிகளாலும் காரைக்குடி திரு. தி. ம. நடராஜன் அவர்களாலும் பங்கிபாசம் புரியப்பெற்றதும் தலைவரவர்கள் கல்வி, பெண்கள் முன்னேற்றம், தேசியம் கதர் அபிவிருத்தி முதலியவைகளைக் குறித்து பேசிய பின்னர் வந்தனம் கூறப்பெற்று கூட்டம் நன்கு நிறைவெய்தியது.

---

### எனது நண்பர்களுக்கு

என் இன்னுயிர்த் துணைவி ஸ்ரீமதி ராக்காயியின் பிரிவு குறித்து அனுதாபக் கடிதங்களும் தந்திகளும் அனுப்பிய தோழர்கள் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். தனித்தனி கடிதம் எழுதாததுபற்றி நண்பர்கள் மன்னிப்பார்களாக.

சிங்கப்பூர், 13-8-35. { அரு. நாராயணன் மேலக்குறட்டியார் வீடு காரைக்குடி.

## அரிமளத்திற்கு மின்சார விளக்கு

(ஒரு நிருபர்)

நாளது 1935-ஞு ஆகஸ்டு மீ 28உ புதன் கிழமை மாலை 6 மணிக்கு புதுக்கோட்டை சமஸ்தானம் அரிமளத்தில் ராயவரம் ஸ்ரீமாந் பழனியப்ப செட்டியார் அவர்களால் மின்சார விளக்கு திறந்துவைக்கப்பட்டது. ராமச்சந்திரபுரம் ஸ்ரீ பிரும்ம வித்யாம்பாள் எலக்ட்ரிக் சப்ளை கார்ப்பரேஷன் மானேஜிங் டைரக்டரான ஸ்ரீமான் பி. கு. நா. நாகப்ப செட்டியாரவர்கள், அரிமளத்திற்கு லயன் கொண்டுவர வசதியளித்ததற்காக அவ்வூர் நகரத்தார்களை பாராட்டிப் பேசி மின்சார சக்தியை எல்லாரும் எல்லாத் துறைகளிலும் உபயோகித்துக் கார்ப்பரேஷனை அபிவிருத்தி செய்யவேணுமென்று கேட்டுக் கொண்டார்.

அயல் கிராமங்களிலிருந்து ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தார்கள். அன்று ஊர் முழுவதும் மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப்பெற்றிருந்தது.

---

### கல்யாணக்கொட்டகை சாம்பலாயிற்று

தேவகோட்டை ஆகஸ்டு 25உ

சென்ற 23-8-35உ நள்ளிரவு சுமார் 1 மணிக்கு தேவகோட்டை ஜமீன்தார் அவர்களுக்குச் சொந்தமான கட்டிடத்தில் உள்ளூர் கோவிந்தசாமி ராஜு நாயுடுவின் பெண் திருமண வைபவத்திற்காகப் போடப்பட்டிருந்த கொட்டகை திடீரெனத்தீப்பற்றி எரிந்துசாம்பலாயிற்று. வீட்டில் கல்யாணச் சடங்குகள் யாவும் முடிந்தது. எல்லோரும் நித்திரை செய்து கொண்டிருக்கும் பொழுது இச்சம்பவம் நடந்தது. அகஸ்மாத்தாய் விழித்துக் கொண்டவரின் உதவியால் பலர் எழுந்திருந்து நெருப்பு அதிகம் பரவாவண்ணம் தடுத்து விட்டனர். நெருப்புப் பிடித்து எரிந்துகொண்டிருக்கையில் பெட்ரோல் வாடை வீசியதாகக் கூறப்படுகிறது

கோவிந்தசாமி ராஜு நாயுடு என்பவர் தன் மகள் காவேரி என்னும் பெண்ணை, ஷியூர் சின்னையா நாயுடு என்பவனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்க மறுத்து, பள்ளத்தூர் ரெங்கசாமி நாயுடுவின் மகன் ராமசாமி நாயுடுவிற்குக் கல்யாணம் செய்து வைப்பதாய் நிச்சயம் செய்து 23-8-35ல் கல்யாணம் செய்ததாகவும், அன்று இரவிலேயே இச்சம்பவம் நேர்ந்ததாகவும் கூறப்படுகிறது. தேவகோட்டைப் போலீசார் இவ்வழக்கைப் பதிவு செய்துகொண்டு எதிரியைப் பிடிக்க முயன்று வருகின்றனர். (க. நி.)

---

### அய்மென் ஷண்முகானந்த சங்கம்

மேற்படி சங்கத்தின் ஏழாவதாண்டு ஒன்பதாவது மாதக்கூட்டம் சென்ற ஆடித் திங்கள் 32-ம் நாள் இரவு 8 மணிக்கு மேல் அரு. ராம. அருணாசலம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திருவாளர்களான கா. மாயாண்டி, சுப. ஆறுமுகம், சி. மாணிக்கவாசகன் முதலியவர்கள் முறையே காங்கிரஸ், தேகாரோக்கியம், ஜீவகாருண்யம் என்பவைகளைப்பற்றிப் பேசினார்கள். பின் கீழ்க்கண்ட தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது:—இரங்கோன் கோயில் ரோட்டிலுள்ள ஒரு இந்து ஆலயத்தை இரங்கோன் டெவலப்மெண்டு ட்ரஸ்டார் இடித்ததை கண்டிக்கிறது. பின் தலைவரவர்களால் முடிவுரை கூறுகையில் ரெங்கூன் டெவலெப்மெண்ட்டிரஸ்டார் செய்கையைக் கண்டித்தும் உடனே இடித்த கோவிலை அந்தஇடத்திலேயே கட்டிக்கொடுக்க வேண்டுமென்றும் இந்துக்களனைவரும் தீவிர முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் பேசி முடித்தார்கள்.



## நமது சிறுகதை—1
# 'காதலி தானா?
(V. P. S.)

திருநெல்வேலியில் பிரபல ஜமீன்தாரான ரணவீரநாதனுக்கு வயது 50 ஆகிறது. இதுவரை அவருக்கு 4 கலியாணங்கள் ஆகிவிட்டன. மூத்த சம்சாரத்தினிடம் மட்டும் ஒரே பிள்ளை பிறந்து அவனுக்கு வயது 28 ஆகிறது. லண்டனில் பாரிஸ்டர் பிரிட்சைக்குப் படித்து முடித்து அடுத்த மாதத்தில் இங்கு வருவதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. ரணவீரநாதருக்கு கலியாணத்திலேயே இவ்வளவு இச்சையேற்பட்டதற்குக் காரணம் என்னவென்று கேட்பது நன்றாக இராது. வயது அதிகமாக அதிகமாக அவருக்கு கன்னிக்காதலும் வளர்ச்சி பெற்று வந்தது, காதலிலே அவர் ஒரு புதுமைப் பிரியர். பழமையை அவர் விரும்புவதே கிடையாது. ஒரு பெண்ணை மணந்து 4 வருஷங்களானால் போதும். அது அவருக்குப் பழமையாகிவிடும். ஆனால் இவரது ஆசையைப் பூர்த்திசெய்ய எத்தனை பெற்றோர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள் தெரியுமா? ஈ மொய்ப்பது போல நூற்றுக்கணக்கானவர்கள் இவரிடம் கன்னி வியாபாரம் செய்யக் காத்துக்கொண்டிருக்கின்றனர் இவருடைய வீட்டைச் சுற்றி. இளமையா, அழகா, அறிவுப் பெருக்கமா என்ன ஐயா அவ்வளவு ப்ரியம் இவரிடம்? என்று நீங்கள் சந்தேகப்படலாம். எல்லாம் தெரியாதா? 'வெள்ளையப்பர்' தான். சர்வமும் வெள்ளையப்பருக்கு அடிமைமயம். மூசோலினியின் அபிஸீனிய ஆசைகூட வெள்ளையப்பருக்காகதானே.

ரணவீரருக்கு ஐந்தாவது மனைவியாக வாய்த்தவள் தான் லீலா. ஆனால் அவள் திருமணஞ் செய்தவளல்ல. சாதாரணமாக உலகில் கூறுகிறார்களல்லவா அந்த வைப்பு முறையால் வந்தவள். ஆனால் அவள் எதிர்பார்த்தபடி அனுபவிக்க வேண்டிய ஒரு சுகங்கூட நமது ரணவீரரிடத்திலிருந்து அவளுக்குக் கிடைக்கவில்லை. அவளுக்கு ரணவீரர் இல்லம் பெரிய ஒரு பாலைவனமாகி விட்டது. இன்பவாழ்க்கையின் நிழல்கூட அங்கு காணப்படவில்லை. இவ்வளவு கலியாணங்கள் செய்து கொள்கிறாரே இந்தக் கிழவர். இதன் காரணமென்ன? தானும் சுகப்படாமல் மற்றவரும் சுகப்பட விடாமல் இப்படி ஒரு பிராணி இருக்குமா என்று லீலா ஆலோசித்தாள்.

ரண வீரரைக் கண்டால் அவளுக்கு நாளுக்கு நாள் எரிச்சல் வளர ஆரம்பித்துவிட்டது. தனது வாழ்க்கையின் பெரிய விலங்காக அவர் இருப்பதாக அவள் எண்ணினாள். ரணவீரர் ஒரு பெருத்த விகார மனப்பான்மையுள்ளவரென்று நான்கூட முதலில் கருதினேன். இவ்வளவு வயதாகியும் இவர் வருஷந்தவறாமல் கலியாணம் செய்து கொள்கிறாரே! இது ஒரு மனிதப் பிசாசுதான் என்று எனக்கு எண்ணமுண்டாயிற்று. ஆனால் லீலாவின் வருகையிலிருந்து அவர் ஒரு "பெண்மை மனிதர்" என்று மட்டுமே தோன்றியது. தனக்கு அருகில் அழகிய பெண் ஒருத்தி உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டும். தனது மனதில் என்னென்ன தோன்றுகிறதோ அதை யெல்லாம் அப் பெண் பூர்த்திசெய்ய வேண்டும். அவ்வளவு தான். இப்படி யிருந்தால் ஒரே பெண்ணிடத்தில் ஆழ்ந்த பற்று எப்படித்தான் உண்டாக முடியும்?

அதுவுமில்லாமல் நல்ல குழந்தை யொன்று அவருக்கு வேண்டுமென்ற ஆசை. மூத்தபிள்ளை தான் நவக்கிரகம் மாதிரி அப்பன் திரும்பிய பக்கமே திரும்புவதில்லை. அவர் இருக்கும் பக்கம் கூடத் தலைவைத்துப் படுப்பதில்லை. தன்னுடைய உயர்ந்த படிப்புக்குப் பணம் கொடுப்பதென்றால் இஞ்சிதின்ற குரங்குமாதிரி பல்லைக்காட்டுகிறான். பெண்ணு—என்று விட்டாலோ பொக்கிஷத்தை அப்படியே திறந்து காட்டுகிறேன் என்கிறான். என்ன செய்வது? அவன் உயிரோடிருக்கும் வரை ஒரு செம்புச் சல்லிகூட இவனுக்குக் கிடைக்காது. அங்கு மிங்கும் எழுதிக் கொடுத்துச் சிறிது பணம் வாங்கினான் நமது காந்தகுமாரன். பாரிஸ்டர் பரிட்சையைப் பல்லைக்கடித்துக் கொண்டு படித்து முடித்தான். அதற்கு மேல் படிக்கத்தான் "வக்கு" வேண்டுமே!

ஏதாவது பிழைப்புப் பார்க்க வேண்டும். அடுத்த அத்தியாயம் அது தானல்லவா? சென்னையின் பாரிஸ்டர் தொகையில் இன்று ஒரு புது வரவு. உருப்படி ஒன்று அதிகமாகி விட்டது.

K. K. Maran
Bar-at-law.

என்ற புதிய ஒரு போர்டு மைலாப்பூரில் முக்கியமான இடத்தில் தொங்கியது. காந்த குமாரன் கே. கே. மாரனாக மாறியது உங்களுக்கு ஆச்சரியத்தை உண்டாக்குமென்று நான் நினைக்கவில்லை. மேல் நாட்டு நாகரிகத்தால் "பேர் சுருங்கிய" அன்பர்களின் எண்ணிக்கை இன்று எழுத ஆரம்பித்தால் .............. எழுதிக்கொண்டே இருக்கலாம்.

புதிதாக வந்திருக்கும் பாரிஸ்டரிடத்திலே ஆரம்பத்திலேயே கேஸ் கட்டுகள் பெருக ஆரம்பித்தன. ஆம். ஸ்ரீ தேவியின் கடைக் கண் பார்வைதான்! அவளும் இப்பொழுது சிறிது நாகரிகம் பெற்று விட்டாளென்று தான் தோன்றுகிறது. ஸ்ரீ தேவி மிக அழகு வாய்ந்தவள் என்று நமது புலவர்களெல்லாம் பாடிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒருவேளை இருக்கலாம். ஆனால் அந்தத் "திருமகள்" இருக்கிறாளே. அவளுக்கு மட்டும் இந்த அழகு செலக்ஷனில் அவ்வளவு திறமை போதாதென்பது தான் எனது அபிப்பிராயம். அவளுடைய திருவருளைப் பெற்ற எண்ணற்ற பெரியார்களின் திருவருளை நான் பெற்றிருக்கிறேன். பெற்றுக் கொண்டுமிருக்கிறேன். ஆனால் திருமகளின் அருள் பெற்ற பலர் "டார்வின் தியரி" (கொள்கை) உண்மைதான் என்பதை மெய்ப்பிக்கும் நிலைமையில் சந்தேகமில்லாமல் இருக்கிறார்களே. இதன் காரணம் தான் எனக்கு விளங்கவில்லை.

ஆனால் நமது மாரன் உண்மையிலேயே "மாரன்!" (மன்மதன்) தான்! நல்ல அழகு, நல்ல உடற்கட்டு, சொல்தெளிவு, கண்ணில் ஒளியும் காதலும், கம்பீரநடை, ஆடை அலங்காரங்களில் முதல்தரம். இவ்வளவோடு நல்ல புத்தி சாலித்தனமும் சேர்ந்திருந்ததென்றால் சொல்லவும் வேண்டுமோ?

அடிக்கடி பிச் வாசம்! உல்லாச வாழ்க்கையில் மாரனுக்குப் பிரியம் அதிகம்! ஆமாம் அவைகளெல்லாம் இளமையின் லட்சணங்களல்லவா? ஆனால் இன்னும் காதல் துறையில் ஐயா பயிற்சி பெறவில்லை. ஆனால் உணர்ச்சிக்கு பயிற்சியா வேண்டும். மீனுக்கு நீச்சக் கற்பிப்பது அவசியமா?

* * *

அருமையான மாலை வேளை, செங்கதிரோன் தனது நீண்ட கரங்களினால் உலக மக்களிடம் விடைபெற்றுக்கொண்டிருக்கிறான். உலகமெல்லாம் பொன்மயமாகத் திகழ்கின்றது. சென்னைக் கடற்கரையின் காட்சி ஆஹா! சொல் கடந்த காட்சி! திடீரென்று சூரியன் மறைந்தான். வெகுவேகமாக ஒரு மோட்டார் வந்துநின்றது அப்பா என்ன இது! சற்று முன் அந்த சூரியனிலிருந்து வழித்த உருக்குப் பொன்னொளியிருக்கிறதே அதைத் திரட்டிச் செய்யப்பட்டது போன்ற உருவம். மேகத்தைவிட்டு இறங்குவதுபோலக் காரைவிட்டு அந்தக்கன்னிகை இறங்கினாள். இரக்கமின்றி "தொள தொள" வென்று பின்னியிருக்கும் அவள் கூந்தல். அதிலே பொறுக்கி யெடுத்துச் செருகியிருக்கும் அழகிய ரோஜா, ஐந்தாறு மல்லிகை ஆகியவை உள்ளத்தைக் கவரச்செய்தன. அவளது காந்த விழிகள் மகாசக்தி பொருந்தியிருந்தன. அவள் அணிந்திருந்த அந்த பட்டு வெண்கச்சு இருக்கிறதே! அது செய்த பாக்கியம் யார் செய்தார்! நிமிர்ந்து இணையற்று நிற்கிறது அவளது விரிந்த மார்பு. அபிஸீனியா—இதாலிப்பிரச்னை அரசியல் உலகில் ஏற்படுத்தியிருக்கின்ற கிளர்ச்சியைப் போன்று காதல் உலகில் இந்தப் பெண் ஓர் பெரிய அபிஸீனிய ப்பிரச்னையாக விளங்கினாள். காதல் உணர்ச்சியுள்ள எந்த மனிதனுடைய பார்வையும் அவளைத் தப்பிச்சென்று விடமுடியாது.

தெள்ளிய மணல் பரந்த ஓரிடத்தில் கடல்நீருக்கு மிக அருகிலே உட்கார்ந்து கொண்டாள் அப்பெண்மணி. கடலின் சிறு அலைகள் இவளுடைய அழகிய கால்களிலே வந்து கொஞ்சி விளையாடி முத்தமிட்டன. சிரித்திடக் கும் கடலின் நீரிலே இவள் காலிடும் பாக்கியம் ஒரு சில சிற்றலைகட்குத் தானே கிடைத்தது! அதுபோல இப்பெண்மணிக்கு யாராவது ஒரு ஆடவனுக்குத் தானே கிடைக்கக்கூடுமென்று

(8-ம் பக்கம் பார்க்க)

# குமரன்

காரைக்குடி.
யுவஹு ஆவணி மீ 20உ


## பிள்ளையார்பட்டிக் கூட்டம்

நாட்டுக்கோட்டையார் சரித்திரத்தில் ஆவணி 18உ ஒரு முக்கிய தினமாகி யிருக்கிறது. சீர்திருத்த நெறியாளரின் உணர்ச்சியும் தியாகமும் பெருக்கெடுத்துத் தேம்பி நின்றது. சென்ற பல்லாண்டுகளாக உழைத்த உழைப்புக்குப் பலனேற்படுங் காலத்தின் முதல் நாள் ஆவணி 18உ யென்பது மிகையன்று. நாட்டுக்கோட்டையாரின் ஒன்பது கோவில் நகரத்தாரும் 18உ பிள்ளையார்பட்டிக் கூட்டத்தின் முடிவை யெதிர் நோக்கியிருந்தனர். சீர்திருத்த ஆர்வமுள்ள யாவரும் இக்கூட்டத்தின் முடிவில் பேரார்வங் கொண்டிருந்தனர். அப்படியே பழமை விரும்புவோருங் கவலை கொண்டனர். இடையேயுள்ள பொது ஜனங்கள் கோவில் காரியங்கள் சிரமமின்றி நடை பெறுவதில் தடையேற்படாமலிருக்க வேண்டு மென்று கவலை கொண்டனர். முதலாவது பிள்ளையார்பட்டியில் ஏற்பட்ட இக் கிளர்ச்சியின் முடிவு மற்ற எல்லாக் கோவிலுக்கும் வழி காட்டியாகி விடுமாதலால் இதில் யாவரும் கவலை கொண்டதில் ஆச்சரியமில்லை. இதனுல் பிள்ளையார்பட்டி நிர்வாகஸ்தரின் பொறுப்பு மலையாக வளர்ந்து விட்டது.

சாதாரணமாக எண்ணி எழுதப்பட்ட இரண்டு ஓலைகள் சமூகத்தின் அஸ்திவாரத்தையே பெயர்க்கும் படியான கடப்பாரையின் நுனியாக நிற்குமென்று கருதவில்லை. ஓலை மாலையைத் தடுக்க உபயோகிக்கப்பட்டது. மாலைத் தடையின் பயனாக கல்யாணம் நிறுத்தப்படுமென்று இதுவரை கருதப்பட்டிருந்த எண்ணம் துளாக்கப்பட்டுவிட்டது. சீர்திருத்தக்காரர் தங்கள் வழியில் இப்படிப்பட்ட தடைகளை லட்சியம் செய்யமாட்டார்களென்ற நிலைமை வெட்ட வெளிச்சமாகிவிட்டது. மாலைத் தடையேற்பட்ட கல்யாணத்திற்கு ஒன்பது கோவில் நகரத்தாரும் முக்கியமாக எல்லாக் கோவில் காரியக்காரரும் விஜயம் செய்து கண்ணியப்படுத்தினார்கள். ஒன்பது கோவில் நகரத்தாரும் எழுந்து பேசி ஆதரித்து வாழ்த்தினார்கள். இந்த நிகழ்ச்சியானது கோவிலின் ஜீவ நாடியும் கோவில் நகரத்தாரின் வஜ்ராயுதமுமான மாலைத்தடையையும் கைபோட்டு அசைத்துவிட்டது. மாலை யில்லையென்றால் நகரக் கோயில்கள் சாதாரண தேவஸ்தானங்களாகவேண்டியதுதான். வரி போடவோ, வசூலிக்கவோ எதுவும் முடியாது. இந்த அடிப்படையில்தான் நகரக் காவில்கள் கால்கொண்டு நிற்கின்றன இதை லகுவில் அசைக்க முடியாது. எவ்வளவு பலசாலியும் கோடீசுவரனும் மாலையில்லாமல் கல்யாணம் செய்யத்துணிகிறதில்லை, துணிய முடிவதில்லை. அமராவதி புதூர்க் கல்யாணம் சீர்திருத்தக்காரரின் முழு பலங்கொண்டு செய்யப்பட்டதாகும். காரைக்குடி கொத்தான் கல்யாணம் துணிவுடன் செய்யப்பட்டதானுலும் கோவில் எதிர்ப்புத் தோன்றுமுன் மாலைத் தகராறு இல்லாமல் செய்யப்பட்டது. அது தப்பிதமென்று ஓலை புறப்பட்டதும் சீர்திருத்தக்காரருடைய சக்தி திரள ஆரம்பித்தது. பூரண சக்தியும் அமராவதி புதூரில் வெளிப்பட்டது. இதன் முடிவு எங்கே போய் நிற்குமென்பதில் யாவருங் கவலைகொண்டனர்.

பிள்ளையார்பட்டிக் கூட்டத்தின் முடிவு நல்லமாதிரியாக ஆகவேண்டுமென்பதில் நாமும் கவலைகொண்டோம் ஆவணி 1உ கூட்டத்தின் போக்கு விபரீதத்தை யெதிர்பார்க்கும்படியாக இருந்தது. ஆனுல் 18-ந் தேதிக் கூட்டம் ஆரம்பத்திலேயே நற்குறி காட்டி இருக்கிறது. முன்னெச்சரிக்கையாகவே சமாதானப் பேச்சுக்கு இடங்கிடைத்தது வெற்றிக்கு அறிகுறியாக இருந்திருக்கிறது. கோயில் நடவடிக்கைகளில் இடைஞ்சல் செய்யாதிருந்தால் போது மென்று கருதிய சமாதானப் பிரியர்கட்கு சீர்திருத்தக்காரர் கம்பீரமாக இடமளித்தது குறிப்பிடத் தக்கதாகும். அப்படியே சீர்திருத்த வழியில் கோயில் குறுக்கிடாமலும் இடைஞ்சல் செய்பவர்கள் சேஷ்டைக்கு இனிமேல் கோவில் வாசலில் இடமில்லாமலும் செய்ய மற்றவர் இசைந்ததும் பாராட்டக் கூடியனவாகும். இந்த ஏற்பாடு முற்பகலிலேயே முடிவு பெற்றன வென்றறிகிறோம். பின்னர் இரு கட்சியாளருக்கும் இடையில் சமாதானம் செய்வதே பெரிய வேலையாக இருந்தது. அடிப்படை சரியாகிவிட்டதால் முடிவு நன்மையாக ஏற்பட இடமுண்டாயிற்று.

தீர்மானங்கள் கண்ணியமான முறையில் அமைக்கப்பட்டுள்ளன. கோவில் வாசல்கள் மூலம் உபயோகமான பலதீர்மானங்கள் செய்யப்படலாம். அப்படிப்பட்ட காலமும் சமீபத்தில் வரலாம். அதன் பயனுக சமூகத்திற்குப் பல நன்மைகளு மேற்படக்கூடும். சீர்திருத்தக்காரர் இதுவரை கோவில்வாசல்களில் சென்று தங்கள் கொள்கைக்கு ஆக்கந் தேடவில்லை. உதவி கேட்கவுமில்லை. தற்செயலாக இந்த சந்தர்ப்பம் வாய்த்தது. சமயத்தை நழுவவிடாமல் புத்திசாலித்தனமாக உபயோகித்துக்கொண்டனர். இக்கூட்டத்தினுல் சீர்திருத்தக்காரரது சக்தி எவ்வளவு என்பது ஒருவாறு பொது ஜனங்களால் காணமுடிந்தது. கூட்டமானது ஒரு தினம் அதிகரித்திருந்தால் எவ்வளவுபேர் இதை ஆதரிக்கிறுர்களென்பதை பிள்ளையார்பட்டியிலேயே பார்த்திருக்கலாம். இக்கிளர்ச்சியானது முதலில் பிள்ளையார்பட்டிக் கோவிலில் ஏற்பட்டது சீர்திருத்தக்காரரின் வெற்றிக்குக் காரணமென்னலாம். இக்கோவிலாருள் சீர்திருத்தக் கட்சிக்குப் பலமதிகம். கிளர்ச்சியில் விருப்பமுள்ள இளைஞர் பலரிருக்கின்றனர்.

இக்கூட்டத்தின் பயன் சீர்திருத்தக்காரர்கட்கு வெற்றி யென்று கருதப்பட்டாலும் மற்றவர்க்கும் வெற்றியாகவே முடிந்திருக்கிறது. கோயில்நிர்வாகத்தில் சீர்திருத்தக்காரர் இடைஞ்சலாக நிற்க மாட்டார்கள். இயலுமானுல் உதவியாக இருக்கும்படி தீர்மானம் ஏற்பட்டிருக்கிறது. இது மற்றவர்க்குப் பெரு வெற்றியாகும். தவிர சீர்திருத்தக்காரருடைய நோக்கமெல்லாம் சமூக நலனே யாதலால் சீர்திருத்தக்காரரின் வெற்றி சமூகப் பொதுவுக்கே பயனளிக்கும். எனவே வெற்றி சமூகப் பொது வெற்றியே யாகும்.

முன்னொரு காலத்தில் இளையாற்றக்குடி ஒக்கூரார் சமூகத்துக்குச் செய்த நன்மைக்காக கௌரவிக்கப்பெற்றுர்கள். சமூகத்தின் அடிப்படையைப் புரட்ட வந்த பிரளயத்தை சாதுர்யமாக சமாளித்து வழி திறந்துவிட்ட பிள்ளையார்பட்டி நகரத்தாருக்கு சமூகமே நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறதென்பது மிகையல்ல. பிரஸ்தாபக் கூட்டமானது சமாதான நெறியில் நடைபெற எந்தக் காரணத்தாலாவது தவறியிருந்தால் எல்லாம் தலைதடுமாறியிருக்கும். இதே நிலைமை எல்லாக்கோவிலையும் நெருக்கும். நடப்பதெல்லாம் நடக்கட்டுமென்று விட்டுக்கொண்டே போக வேண்டி நேரும். பிள்ளையார்பட்டிக் கோவிலார் திறமையாக நிலைமையை காலத்தை யனுசரித்துச் சீர்ப்படுத்தி விட்டிருப்பதற்கு நாம் வாழ்த்துக் கூறுகிறோம்.

## பிள்ளையார்பட்டியில் கூட்டம்

### ஆக்ஷேபணை ஓலைகட்கு விசாரணை இல்லை

### சீர்திருத்த மணங்கட்கு நகரத்தார் ஆதரவு

### இனி ஆட்சேபணையின்றி மாலை அனுப்பப்பெறும்

(நமது நிருபர்)

குறிப்பிட்டபடி பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத்தாரின் வருஷக் கூட்டம் ஆவணிமீ 18உ நடைபெற்றது. சதுர்த்தி உற்சவம் முடிந்த மறுநாள் முற்பகலில் பழய காரியக்காரர்கள் காரியத்தனத்தைப் புதிய காரியக் காரரிடம் ஒப்புவிப்பதன் பொருட்டும் மற்ற விஷயங்களைப்பற்றி முடிவு செய்யும்பொருட்டும் இந்தக் கூட்டம் கூடியது. 17உ இரவு சத்தாவரணமாதலால் பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத்தார்களும் மற்றக்கோவில் நகரத்தார்களும் வந்திருந்தார்கள். 18உ காலையில் கூட்டம் நடைபெறுவதால் அதன் பொருட்டாகவும் பலர் முதல் நாளிரவே வந்து சேர்ந்தார்கள். அன்று சதுர்த்தியாதலால் விரதம் ஆரம்பிக்கவும் நிறுத்தவும் பெண்மக்கள் ஏராளமாக வந்திருந்தார்கள். இந்தக் காரணங்களாலும் வீருசாமி மேளக் கச்சேரியை யுத்தேசித்தும் ஏராளமான ஜனக்கூட்டத்துடன் இரவு விழா சிறப்பாக நடைபெற்றது. மழையிருந்ததால் இரவு அதிக நேரஞ் சென்றே சுவாமி புறப்பாடு நடைபெற்றது. 18உ கூட்டத்தைப்பற்றி சீர்திருத்தக்காரர்கள் பலவிதமான யோசனைகளில் ஈடுபட்டிருந்தனர். சொ. முருகப்பா, வயிநாகராம ராமநாதன் செட்டியார், சேவு லெ. ராம. நாராயணன் செட்டியார் முதலியோர் 17-உ இரவே வந்து சேர்ந்தனர். வைதீகக் கட்சியின் சார்பான பலரும் ஏற்கனவே வந்திருந்தனர். இரவு அவர்களும் தனியான கூட்டம்கூடி யோசனைகள் செய்தனர். 18உ காலை ஆகாரத்தின் பின், நிலைமை முற்றிக்கொள்ளு மென்று தோன்றியதால் சமாதான முறையைக் கைக்கொள்வது நலமென்று கருதியவர்கள் முயற்சியைத் துவக்கினுர்கள். வ. சொ. ராம. ராமசாமி செட்டியார், ராம. ப. மெ. சொக்கலிங்கம் செட்டியார், சொ. முருகப்பா, வீ. சித. நா. சிதம்பரம் செட்டியார், ஆத. ராம. சு. சுப்பிரமணியன் செட்டியார், வயிநாக ராம. அ. ராமநாதன் செட்டியார், முரு. லெ. காசிச் செட்டியார் ஆகியவர்கள் இருந்து சுமார் இரண்டு மணி நேரம் வாதித்து சமாதான வழியில் ஒரு தீர்மானத்திற்கு வந்தார்கள். அதில் இரு தரப்பார்க்கும் சில சிறு ஆக்ஷேபனைகள் இருந்தன. கூட்டம் சுமார் 10 மணிக்கு கற்பகப் பிள்ளையார் சன்னிதானக் கொட்டகையில் ஆரம்பமாயிற்று. பிச்சப்பா சுப்பிரமணியமும் கூட்டத்திற்கு வந்திருந்தார். காரியத்தனத்திற்கு வெற்றிலை பாக்கு வாங்க வேண்டிய விஷயமே முதலாவதாக நடக்க வேண்டியது என்று சொல்லப்பட்டது. மாலை— ஓலை பற்றிய விஷயம் முதலில் பைசலாக வேண்டு மென்றும் இன்னும் தங்கட்கு ஆக்ஷேபகரமான விஷயங்கட்கும் 1உ கூட்டத்தில் நடை பெற்ற விஷயங்கட்கும் பரிகாரங்கள் நடந்த பின் காரியத்தனத்தைப்பற்றிப் பேசலாமென்றும் சீர்திருத்த அன்பர்கள் வாதித்தார்கள். நீண்ட நேரம் வாதம் நடந்தது. ஒன்றும் முடிவு செய்ய முடியவில்லை. சொ. முரு; பிச. சுப; வயிநாகராம். அ. ராம; வ. சொ. ராம. வள்ளியப்பா; முதலிய பலர் சமாதானத்தில் முயன்றனர். மற்ற பகுதியிலும் முயற்சி நடந்தது. பகல் மணி ஒன்று வரை முடிவு பெறவில்லை. சாப்பாட்டுக்குச் சென்றனர். மேலவட்டகை மேலப்பத்தூர் கீழவட்டகை நகரத்தார், இந்நிலைமையானது கோவில் காரியங்களையே ஸ்தம்பிக்கச் செய்யுமாதலால் துணிவாக ஒரு முடிவேற்படுத்த வேண்டுமென்று கருதினுர்கள். வ. சொ. ராம. ராமசாமி செட்டியாரும், கும. பெரி. பெரியகருப்பன் செட்டியாரும் இன்னும் சிலரும் சமாதானத்திற்குப் பெரிதும் பாடுபட்டார்கள்.

மீண்டும் கூட்டம் 4-35-க்கு ஆரம்பமாயிற்று. வந்திருந்த நகரத்தாருள் வயதில் பெரியவரான காரைக்குடி மெ. மெ. கொட்டமடக்கி செட்டியார், புதிய காரியக்காரர்களான காரைக்குடி சிவ. நா. காசிச் செட்டியாரிடமும் (பேரவிஞர் வகை) பூலாங்குறிச்சி வ. சொ. ராம. ராமசாமி செட்டியாரிடமும் வெற்றிலை பாக்கு நிறைந்த காரியக்காரர் மரியாதைத் தாம்பாளத்தைக் கொடுத்தார்கள். உடனே நகரத்தார் மேள வாத்தியத்துடன் கற்பக விநாயகர் தரிசனத்திற்குச் சென்றுர்கள். மறுபடியும் கூட்டத்தில் விஷயங்கள் பேசப்பெற்றன. ஏகமனதாகப் பின்வரும் முக்கிய தீர்மானங்கள் நடைபெற்றன.

"காரைக்குடி ப. மெ. மெ. மெய்யப்பன் மகன் நடராஜனுக்கு நடந்த கல்யாண விஷயமாயும், அமராவதிபுதூர் ராம. பள. பிச. சுப்பிரமணியன் மகள் அலமேலுவுக்கு நடந்த கல்யாண விஷயமாயும் காரைக்குடியிலிருந்தும் அமராவதி புதூரிலிருந்தும் இவ்விடம் கோவில் வாசலுக்கு வந்த ஓலைகளில் உள்ள விஷயங்களை விசாரிக்கிறதில்லையென்று தீர்மானித்திருக்கிறது."

"இனிமேல் இதுபோல் உள்ள விஷயங்களைப்பற்றியும் கோவில்பணம் கொடுக்கல் வாங்கல் அல்லாத மற்ற விஷயங்களைப்பற்றியும் கோவில் வாசலுக்கு ஓலை யெழுதி வந்தாலும் அத்தாக்ஷி எழுதிவைத்தாலும் அவைகளைக் கோவில் வாசலில் விசாரிக்கிறதில்லையென்று தீர்மானித்திருக்கிறது."

"முன் வழக்கம்போல் கல்யாணங்களுக்கு மாலைக்காக பாக்கு வைத்தால் கோவில் பாக்கியிருந்தால் வாங்கிக்கொண்டு பாக்கை ஒப்புக்கொண்டு மாலை அனுப்புகிறது. கோவில் பாக்கியில்லாவிட்டால் வழக்கம்போல் பாக்கு வைப்பவர்களுக்கு ஆக்ஷேபனையன்னியில் மாலை அனுப்புகிறது."

"கோவில் பாக்கியிருந்தாலும் இல்லாவிட்டாலும் வழக்கம்போல் பாக்கு வைத்து மாலை வாங்காமல் மீறிக் கல்யாணம் செய்தால் அதற்குக் கோவில் வாசலில் நகரமுறைப்படி விதாயம் செய்கிறதென்று தீர்மானித்திருக்கிறது."

சமாதானமாக விஷயங்கள் முடிவுபெறுமென்று நிச்சயமானதும் பலர் புறப்பட்டு விட்டனர். இரவு சாப்பாட்டிற்குச் சிலரே தங்கியிருந்தனர். கூட்டம் இரவு சுமார் 8-மணிக்கு முடிவெய்தியது.

இக்கூட்டத்தின் பொருட்டு சீர்திருத்த இளைஞர்கள் சுமார் 300 பேர் விஜயம் செய்திருந்தனர்.

## தந்திச் செய்தி

### சிங்கப்பூர் மார்க்கெட்

(நமது நிருபர்)

சிங்கப்பூர் செப்டம்பர் 4.

...ம் ஒருபீக்கல் நூற்று ஏழரை வெள்ளி

...பர் ஒரு பீக்கல் இருபத்தைந்து வெள்ளி

...காப்பரா ஒரு பீக்கல் மூன்று வெள்ளி எண்பத்திரண்டரை காசு

செப்டம்பர் 2.

...பர் $ 25—50

### இரங்கூன் மார்க்கெட்

(நமது நிருபர் தந்தி)

ரெங்கூன், செப்டம்பர் 3.

| | |
|---|---|
| ...டு நெல் | 90, 91 |
| ...ில் நெல் | 90' 91 |
| ...பரிய மில் ஸ்பெஷல் | 220, 222-8 |
| ...செய்ன் சின்ன மில்ஸ். | 230, 232-8 |
| ...செய்ன் எஸ்கியூ | 237-8 |
| ...டோன் பஜார் | 245 |
| ...டோன் எஸ்கியூ | 255 |
| ...ரடி புழுங்கலரிசி / ...ார்கெட் லாங் | 247-8, 257-8 |
| ...ில்சார் | 247-8, 257-8 |
| ...ுல்பாயில்டு | 237-8, 242-8 |
| ...ாதாலே | 257-8, 246-8 |

### சென்னை மார்க்கெட்

சென்னை செப்டம்பர் 3.

| | | | |
|---|---|---|---|
| ...ம்பாய் ஆலைத்தங்கம் | 34 | 10 | 3 |
| ஷை வாயிதா | 34 | 11 | 6 |
| ...ூஸா தோலா 1-க்கு | 34 | 5 | 0 |
| ...வரன் மொத்தம் | 22 | 4 | 0 |
| ஷை சில்லறை | 22 | 4 | 6 |
| வெள்ளி 100 ரூ. எடை | 65 | 14 | 0 |
| ஷை ரூ. 1 எடை | 0 | 11 | 0 |

## நோட்டீஸ்

தேவகோட்டை

டி. மு. கோர்ட்டு

1935-ளு O. P. No. 26.

மகமத் சுலைமான்சேட் அண்டு பிரதர்ஸ் } மனுதார்

PL. S. சொக்கலிங்கஞ் செட்டியார் } எதிர் மனுதார்

மதுரை டவுன் டி. மு. கோர்ட்டு O. S. No. 207/34ல் தேவகோட்டை டி. மு. கோர்ட்டு E. P. No. 91/35ல் ஏற்பட்ட முச்சலிக்காபடி எதிர் மனுதார் நடக்கத் தவறியபடியால் ஷை எதிர்மனுதார் பேரில் இ. பி. கோ. Ss. 172, 174படி ஏற்பட்டுள்ள குற்றங்களுக்கு பிராசிகியூஷன் செய்யும்படி மனுதாரால் ஷை மனு தாக்கலாகி 10—9—35உ வாயிதா ஏற்பட்டிருக்கிறபடியால் எதிர்மனுதாருக்கு ஏதாவது ஆக்ஷேபனையிருந்தால் ஷை தேதியில் பகல் 11 மணிக்கு நேரிலோ வக்கீல் மூலமாகவோ ஆஜராகி தெரிவித்துகொள்ளவேண்டியது. தவறினுல் எக்ஸ்பார்ட்டியாக ஷை கோர்ட்டாரால் முடிவு செய்யப்படுமென்பதை இதன் மூலம் கண்டிப்பாய் அறியவும்.

K. Srinivasa Ayyengar
Advocate for Petitioner
Devakottai.
4—9—35





## நோட்டீஸ்

தேவகோட்டை

சப்கோர்ட்டு

1935ளு S. C. No. 126.

மு. கோ. கர்ணம் அய்யர் — வாதி

1. சு. மு. சு. சுப்பிரமணியன் செட்டியார்
2. மு. ராம. மு. ராம. மு. முத்துராமன் செட்டியார் } பிரதிவாதிகள்

ஷை நிம்பர் 1-ம் பிரதிவாதியால் (2-ம் பிரதிவாதியின் தகப்பனுர், முருகப்ப செட்டியாருக்கு எழுதிக் கொடுத்த புரோநோட்டை, வாதி மேடோபர் பெற்று, ஷை நோட்டுத் தொகை ரூ. 374—0—0 யும் வரப்பற்ற, வாதி வியாஜ்ஜியம் செய்து ஷை நிம்பர் 9-9-1935 உ வாயிதா ஏற்பட்டிருப்பதில் ஷை தேதியில் உங்கள் ஆக்ஷேபனையைத் தெரிவித்துக் கொள்ள வேண்டியது. தவறினுல் உங்கள்பேரில் ஒருதலை பக்ஷமாகத் தீர்ப்பாகி விடும்.

S. Krishnamoorthi,
வாதி வக்கீல்,
31-8-35.



## நோட்டீஸ்

சிவகெங்கை

டி. மு. கோர்ட்டு

O. S. நிர். 347 of 1934.

வாதிகள்

1) இராமனுதன் செட்டியார்—Died
2) நடேசன் செட்டியார்
3) மைனர் சிவசாமி
4) மைனர் சொக்கலிங்கம்

ஷை மைனர் 3, 4, வாதிகளுக்கு அடுத்த சிநேகிதர் 2-ம் வாதி மூலம்

பிரதிவாதிகள்

1) அடைக்கப்பனம்பலம்
2) பொன்னையா
3) சின்னடைக்கன்
4) மங்கப்பன் சேர்வை
5) பழனியப்ப செட்டியார்
6) நாச்சியப்ப செட்டியார்
7) அண்ணமலை செட்டியார் } திருமயம் தாலூகா புதுப்பட்டி

ஷை நிம்பரில் 1-ம் வாதிக்கு 1 to 3 பிரதிவாதிகள் ரூ. 80-0-0 க்கு யெழுதிக் கொடுத்திருக்கிற ஈடு கடன் தெஸ்தவேஜின் பேரில் 5 முதல் 7 வரை பிரதிவாதிகளையும் கட்டுப்படுத்தி தீர்ப்புபெற வியாச்சியம் செய்திருப்பதில் 5 முதல் 7 வரை பிரதிவாதிகள் ஆஜராவதற்காக 16-9-35உ வாயிதாவும் யேற்பட்டிருக்கிறது.

P. A. சுப்பிரமணிய அய்யர்,
வக்கீல்
சிவகெங்கை.

# — காதலிதானு? —

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

கற்பனைசெய்து மனங்கலங்கிய வாலிபரின் தொகை எவ்வளவென்றெண்ணுகிறீர்கள்?

கழுத்திலே அழகிய ஒரு பொற்சங்கிலி, அதன்மீது அழகியதொரு முத்தாரம். குன்றிலே படர்ந்த பொற்கொடிபோல் காணப்பட்டது மார்பின்மீதொளிர்ந்த அந்தச் சங்கிலி. இடையிலே மிக உயர்ந்த பட்டாடை. உடலுக்கேற்ற உயரியஉடை. நிகரற்ற பேரெழில்வாய்ந்த பெண்ணொருத்தி மீது படும் பெரும்பேறு தனக்குக் கிடைத்திருப்பதை பெண்ணி அவ்வுடை இறுமாந்திருக்கிறது.

மாலை மணி 6-30 ஆயிற்று. இனிமையான கடற்காற்று வீசிக்கொண்டிருக்கிறது. நமது மாரன் கையிலே ஒரு பத்திரிகையை வைத்துக்கொண்டிருக்கின்ருன். அவன் வாயிலிருந்து ஏதோ ஒரு சிறுகீதம் வெளிவந்துகொண்டிருந்தது. தனது பாட்டிலேயே கவனம் வைத்துக்கொண்டு தரையை நோக்கிச் சென்றுகொண்டிருந்த மாரன் மெதுவாக மேற்றிசையைத் திரும்பி நோக்கினுன். காற்று ஜிலுஜிலுவென்று வந்துகொண்டிருந்தது. அத்துடன் இனிமையான கீதமொன்றும் கேட்க நேர்ந்தது மாரனுக்கு.

மாலைப் பொழுதிலொரு
மேடை மிசையே
வானையும் கடலையும்
நோக்கியிருந்தேன்
மூலைக் கடலினை யவ்
வான வளையம்
முத்தமிட்டே தழுவி
முகிழ்த்தல் கண்டேன்.

என்ற பாட்டு அமுதங் குழைத்து அமைத்த வீணைக்குரலாக வெளிப்பட்டுப் பரவியது.

மாரன் உள்ளத்திலே ஒரு புதுமையான உணர்ச்சி. யாரோஒருபெண்தான் என்று அவன் நிச்சயம்செய்ததில் ஆச்சரியமில்லை. முகத்தை ஒருமுறை நன்ருகத் துடைத்துக் கொண்டான். உடையை ஒழுங்காக உதறி அணிந்துகொண்டு இசை எழுந்த திசையை நோக்கி நடந்தான். சிறிது நேரத்தில் கடற்கரை முழுதும் ஒரே இருள் சூழ்ந்துகொண்டது. ஆளை ஆள் கண்டறிய முடியவில்லை. மாரன்மனதிலே ஒரு பெரிய பாரம் ஏறியிருக்கிறது. அவன் உற்சாகத்தை ஏதோ ஒன்று கௌவிக்கொண்டு விட்டதுபோல் தோன்றுகிறது. அடுத்தநாள் சாயங்காலம் 6 மணியை அவன் மிக ஆவலோடு எதிர்பார்த்தான். அவனுக்காகவாவது மணிக்கணக்கு 24 லிருந்து 6 ஆகக் குறைந்துவிடக் கூடாதா!

அப்படியு மிப்படியும் சிரமப்பட்டு 22 மணிநேரத்தைக்கழித்து விட்டான் மணி நாலுக்கே கடற்கரை வந்து சேர்ந்தான் மாரன். அவன் நேற்று தினத்தைவிட இன்ெருரு புதிய தோற்றத்தோடு விளங்கினுன். ஆனல் மனதில் மட்டும் தீராதகவலை.

அதோ உட்கார்ந்து கொண்டிருக்கிருள் அவள் தானு? ஆம் ஆனல் அவளோடு முதலில் எப்படிப் பேசுவது? நமது உள்ளக்கருத்தை அவள் ஏற்றுக்கொள்வாளா? புரியுமா? இன்றேல் தப்பர்த்தம் செய்து கொள்வாளோ? ஆனல் நேற்று 5 மணிக்கு வந்தவள் இன்று 4 மணிக்கே வந்து விட்டாளே. அவளும் நம்மீது சிறிது விருப்பங்கொண்டிருப்பாள் போலத்தான் தோன்றுகிறது............ சரி......... சிறிது பேசித்தான் பார்க்கலாமே" என்று துணிவுடன் சென்ருன் மாரன்.

மாரன் வருகையை அறிந்த அப்பெண்ணின் உள்ளத்தே கள்வெறியுண்டாயிற்றென்று கூறலாம். ஆனல் புதுச் சந்திப்பு. சிறிது கிராக்கி செய்துகொள்வது நல்லது தானே.

பக்கத்தில் வந்த மாரனுக்கு நாவெழுவே இல்லை. பெண்ணும் கவனிக்காதது போல் இருந்து விட்டாள்.

அவன் மனதில் ஒரு வகையான திகில் எழுந்தது. அவள் பார்க்காதது நல்ல வேளை. இப்படியே திரும்பி விட்டால் போதுமென் றெண்ணிய அவன் சரேலென்று திரும்பினுன்.

கடற்கரைப் பெண்ணின் மனத்தை கோடரியால் வெட்டியது போலிருந்தது. நம்முடைய அலட்சியம் காதல் நஷ்டத்தை உண்டாக்கிவிட்டதே என்று அவள் நெஞ்சம் துடியாய்த் துடித்தது.

ஆனல் மாரனின் மனம் கட்டப் பட்டிருக்கும் இடம் இங்கே யல்லவா? அவன் அவ்வளவு துணிவாகச் சென்றுவிட முடியுமா? ஆகவே சிறிது திரும்பிப் பார்த்தான. இவளுடைய கடைக்கண்பார்வை உள்ளத்திலே பளீரென்று ஒருஅடி அடித்தது. அவன்உடம்பு மயிர்க் கூச்செறிந்து விட்டது. முன்னல் சென்றவன் மீண்டும் திரும்பி வந்து அவளோடு பேசுவது அவ்வளவு சிலாக்கியமென்று அவன் கருதவில்லை. அவ்வளவுதான். வழக்கம்போல்இருள்வந்து விட்டது. அம்மையாரை அழைத்துச் செல்லும் மோட்டாரும் வந்துநின்றது. பழியாக வந்து தொலைத்த இந்த இருளை அவர்கள் என்ன திட்டு திட்டியிருப்பார்கள். ஆனல் இருளை எதிர்பார்க்கும் காலமும் இது நீடிக்கக்கூடாதா என்றுஆசைப்படும் காலமும் இப்புதுக் காதலர்க்கு இனிமேல் தானே ஏற்பட போகின்றது!

*　*　*

மறுபடியும் அதே கடற்கரை, மூன்று மணிக்கு வந்த மாரன் அதே மூன்று மணிக்கு அதே பெண்ணை அதே இடத்தில் அதே காதல் உணர்ச்சியுடன் கண்டான். இன்றைக்கு சிறிது அதிகநேர மிருக்கிறதல்லவா? ஆகையினல் சிறிது அதிக சந்தோஷந் தான் மாரனுக்கு. சீ. எவ்வளவு தடையப்பா! புதுக்காதலர்கள் தானே சிறிது பேசிவிட்டுப் போகட்டு மென்றிருந்தாலென்ன? என்ன பெரிய நஷ்டம் வந்துவிடப் போகிறது. இந்த இயற்கைக்கு என்னதான் பொருமை ஐயா! சீக்கிரத்தில் வந்த காதலரைத் துரத்தியடிப்பதே போல் கார்மேகம் வந்து கனமாகச் சூழ்ந்தது. இருவர் மனமும் என்ன பாடுபட்டிருக்குமென்று யாரால் சொல்ல முடியும். அரைமணிநேரத்தில் சென்னையிலேயே இதுவரை இல்லாத விதமாக சோணமாரி பெய்ய ஆரம்பித்தது. மழையில்கரைந்தமண்போல இருவர் உள்ளமும் கரைந்து நீராய்ஓடியது. ஒருவாரம் வரை கடற்கரை மாரனுக்கு கொலைக்களமாக விளங்கியது. இவ்வளவு ஏமாற்றம் அவன் வாழ்க்கையிலே அடைந்தது கிடையாது. ஏமாற்றம் மனத்துயர், உலகப்பழி, ஓயாக்கவலை, உடல் மெலிவு தற்கொலை முயற்சி, அவ்வளவும் இந்தக் காதலிலேதான் இருக்கின்றதென்பதுபாபம் "காதற்பாலபாடம்" படிக்கும் மாரனுக்கு எப்படித் தான் தெரியமுடியும்? ஒருவாரம் வரை கடற்கரைக்கே வரவில்லை அந்தப் பெண். இதைவிடப் பெரியதுக்கம் உலகத்திலே இருக்கவே முடியாதென்பதை மாரன் உணர்ந்து விட்டான். இவ்வளவு கஷ்டத்திற்கும் பின் கிடைப்பதனல் தான் காதல் இனிமையாக இருக்கின்றது என்பதை அறிந்து கொண்டான்.

*　*　*

மத்தியானம் சுமார் ஒரு மணியிருக்கும். தபால்காரன் ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தான். மாரன் இந்த சந்தோஷச் செய்தியை எதிர்பார்க்கவே இல்லை. கால்அடி நீளமுள்ள இந்தக் கடிதத்தில் கடல் போன்ற மகிழ்ச்சி அடைங்கியிருக்கு மென்று அவன் எப்படித்தான் எதிர்பார்க்க முடியும்? தனது சொந்த ஊர் திருநெல்வேலி யென்றும் தான் மிகப் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவளென்றும் சென்னையில் உல்லாசமாகக் காலங்கழிக்க வந்ததாகவும், அவசரமாகத் தக்கி வந்திருப்பதால்தான் இன்று திருநெல்வேலி செல்வதாகவும் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்துவிட்டால் திருநெல்வேலி வரை உல்லாசமாகப் பேசிக்கொண்டு செல்லலாமென்றும் குறிப்பிட்டிருந்தாள் மடை திறந்ததுபோல மகிழ்ச்சி வெள்ளம் பெருகியது, சரியாக 6 மணிக்கு ரயில்வே ஸ்டேஷன் சென்ருன் மாரன். இவனுக்காகக் காத்துக்கொண்டிருந்த வேலைக்காரனெருவன் 'தங்களுக்கும் சேர்த்து அம்மாள் டிக்கெட்டு எடுத்துவிட்டார்கள். கடைசி வண்டியான முதல் வகுப்பு கம்பார்ட்மெண்டிற்கு உங்களை வரச்சொன்னர்கள்." என்று கூறினன். அவ்வளவுதான் காதலர் இரகசியத்தை நான் வெளியிடுவதில்லை யென்று பிரமாணம் செய்திருக்கிறேன். ஆகையினல் நீங்கள் என்ன தொந்தரவு செய்தாலும் நான் நிச்சயமாகக் கூற மாட்டேன்.



ரண வீர நாதரின் சொந்த ஊர் தி[...]நெல்வேலி யென்பதை நமது வாச[கர்]கள் மறந்திருக்க மாட்டார்கள். நி[...] பலங்கள் சொத்து சுகங்கள் எல்ல[ாம்] அங்கேதான் இருக்கின்றன. ஆன[ால்] அவருடைய உடலிலே ஏற்பட்டிரு[ந்த] ஒரு வகையான வியாதியைத் தீர்த்[துக்] கொள்வதற்காக அவர் திருச்சியில் [...] அழகிய பங்களாவை வாடகைக்[கு] அமர்த்தி அங்கு ஒன்றிரண்டு மாதங்[க]ளாக வசித்து வருகிருர். அவ[ரது] இளைய மனைவி லீலாவும் அவருட[ன்] இருந்து வேண்டிய சிகிச்சைக[ளை] செய்து வருவதாகக் கேள்வி. சென்[ற] இரண்டு மாதங்களுக்கு முன்பிருந்த[து] போல இல்லாமல் லீலா தனது கிழ[ப்] புருஷனிடம் மிக அன்பாக நடந்[து] கொண்டு வருகிருள். இதன் காரண[ம்] என்னவென்று நமது ஜமீன்தாருக்கு[ப்] புரியவேயில்லை. ஆனல் ஜமீன்தாருக்[கு] நாளுக்கு நாள் நோய் அதிகரித்து[க்] கொண்டே வந்தது. இன்னும் ஒ[ரு] வாரத்திற்கு மேல் தாங்காதென்ற நி[லை]மை ஏற்பட்டதும் அவருக்கு மனதி[ல்] ஒரு வகையான கலக்கம் ஏற்பட்ட[து]. தனது மூத்த மனைவியின் புத்திரனை[ய] காந்த குமாரனுக்குத் தன் சொத்தி[ல்] ஒரு பைசாக் கூட கொடு[க்]கக்கூடாதென்பது அவரது ஆசை. எல்லாவற்றையும் தனது கடைசி மனை[]விக்கே எழுதிவைத்துவிட அவர் விரு[]ம்பினர். இந்த விஷயத்தை மிகவு[ம்] வருத்தத்துடன் லீலாவிடம் வெளி[]யிட்டார். அவள் மனம் திடுக்கிட்டது. இந்த சொத்துபாத்தியதையை அடைய மற்ெருருவன் இருக்கிருனே என்பதை நினைத்தபோது அவள் உள்ளம் வருந்தியது.

இதற்கென்ன வழி செய்வதென்று அவள் நெடுநேரம் யோசித்தாள். அவன் எங்கோ படித்துக்கொண்டிருக்கிருன். அவனை எப்படியாவது ஆளே இல்லாமல் செய்துவிட்டால் நல்லதென்று அவள் கருதினுள். அடுத்தநாள் இரவு 8 மணி யிருக்கும். ஒரு ஆணும் பெண்ணும் தனியான ஓரிடத்தில் உட்கார்ந்துகொண்டு பின்வருமாறு பேசிக்கொண்டிருந்தனர்:—

"ஆமாம் அவனைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டதுண்டா?"

"யாரது! ஜமீன்தார் குமாரன் என்கிருயே எந்த ஜமீன்தார்"

"தெரியாதா? திருநெல்வேலி பாளையம் ஜமீன்தார் தான். அவர் மகனும் என்னவோ காந்த குமாரன் என்ற பேராம். இங்கிலாந்தில் படித்து முடித்து விட்டு சமீபத்தில் தான் வந்திருக்கிருனும். சென்னையில் தொழில் நடத்துவதாகத் தெரிகிறது."

"ஆமாம்—நான் கூடக் கேள்விப்பட்டேன்—யாரோ ஒரு புது பாரிஸ்டர் வந்திருக்கிருர். ஆனல் அவர் ஜமீன்தார் குமாரரென்று ஒருவருக்கும் தெரியாது. சரி. இப்பொழுது அவருக்கென்ன?"

"அவருக்கென்னவா? நல்ல கேள்வி கேட்டீர்கள். அவனிருக்கும்வரை ஜமீன்தார் சொத்திலேஒருபைசாக்கூட நமக்குக் கிடைக்காது. அவனை எப்படியாவது சரிபண்ணினல்தான் ஏதோ சிறிது பார்க்கலாம். என்ன சொல்லுகிறீர்கள். அவனைக் கண்டுபிடிக்க உங்களால் முடியுமா?

சிறிது யோசித்தான் பக்கத்திலுட்கார்ந்திருந்த ஆசாமி. பிறகு சாவதானமாக

"என்னமோ பார்க்கலாம், ஆனல் ஆளையே சரிபண்ண வேண்டுமென்கிருயே. இதுதான் கொஞ்சம் சங்கடமாகத் தோன்றுகிறது"

"சரி அப்படியில்லையானல் வேறென்ன செய்யலாம். ஒரு யோசனை சொல்லுங்கள் பார்க்கலாம்."

"எல்லாம் சாவகாசமாக யோஜித்துச் சொல்லுகிறேன். கிழவனுக்கு எப்படி இருக்கிறது."

(9-ம் பக்கம் பார்க்க)

## நோட்டீஸ்

தேவகோட்டை
சப் கோர்ட்டு

O. S. No. 69 of 1935.

அளகாபுரி சித. அ. சித. நாச்சியப்ப செட்டியார் } வாதி

கோட்டையூர் மு. தெ. அ முத்தையா செட்டியார் குமாரர் தேனப்ப செட்டியார் } (2)-ம் பிரதி வாதி

தேவகோட்டை சப் கோர்ட்டு
O. S. 85/32
E. A. 668/34 நிம்பரில் 4—8—34உ பிறந்திருக்கிற உத்திரவை ரத்துச் செய்யவேணுமென்ற மற்ற விபரமாய் பிருதுசெய்து 18-9-35ந் தேதி வாய்தா போட்டிருக்கிருர்கள். எதிர்வாதமிருந்தால் வாயிதாவன்று கோர்ட்டில் ஆஜராகித் தெரிவித்துக்கொள்ளலாம்.

S. ஜெகனத அய்யங்கார்,
வக்கீல், தேவகோட்டை,
31—8—35

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

"அதற்குள் அவரிடமிருந்து பூரா சொத்தையும் நாம் எழுதி வாங்கிக்கொண்டுவிட வேண்டும். என்னமோ சிறிது கவனமாக இருந்தால் போதும்"

இந்தப் பேச்சுக்கும் பிறகு காதல் நாடகம் ஒரு கால்மணி நேரம் நடைபெற்றது. பின்பு காதலர் கடைக்கண் பார்வையுடன் பிரிந்து சென்றனர்.

*　*　*

லீலாவுக்கு அடுத்த நாள் காலையில் கீழ்வருமாறு ஒரு கடிதம் வந்தது.

"உனது யோசனைப்படி மிகுந்த பிரயாசையுடன் நீ பிரஸ்தாபித்த ஆளைத் தேடினேன். அவர் சென்னையிலேதான் இருப்பதாக அறிகிறேன். அவர் இப்பொழுது மிகப் பெரும் செல்வந்தராக இருப்பதாகத்தெரிகிறது. அவர் தனது தந்தையாரின் சொத்தைப்பற்றிக் கவலைபடவே இல்லையாம். இவ்வாறு எழுதித் தருவதாகவும் கூறுகிருர். ஆகவே அவரை இன்று அழைத்துக் கொண்டு மாலையில் உன்னைச் சந்திக்கிறேன்."

இக்கடிதத்தைக் கண்டதும் லீலா மிகவும் சந்தோஷப் பட்டாள்.

அன்று மாலை லீலா குறிப்பிட்ட இடத்துக்கு ஒரு கார் வந்தது. லீலா எதிர்பார்த்த ஆளை அந்த மோட்டாரில் காணப் படவில்லை. லீலா சிறிது வியப்புற்ருள் என்று தான் கூற வேண்டும்.

"எங்கே அந்த ஆள்"

"யாரது? எந்த ஆள்"

"அவன் தான்—ஜமீன்தார் மகன்—இன்று மாலை அழைத்து வருவதாகச் சொல்லவில்லையா"

"ஆம் அழைத்துத்தான் வந்திருக்கிறேனே—ஆள் இங்கே தான் இருக்கிருன்.

லீலாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. சுற்றிச் சுற்றி விழித்தாள்.

"என்ன நீங்க ரொம்ப விளையாடுகிறீர்களே, ஆளெங்கே"

"இதோ தான்" என்று தனது இடதுகையை நீட்டினுள் "காந்தகுமாரன்" என்று பச்சை குத்தியிருப்பது லீலாவைத் தூக்கி வாரிப்போட்டது.

நமது குமாரர் இருக்கிருரே— காந்தகுமார்— அவருக்குப் பெரியதொரு சந்தேகம் இப்பொழுது தோன்றி யிருக்கிறது. லீலா தனது சிற்றன்னையா காதலியா என்பதுதான் அது—என்ன சொல்லுகிறீர்கள்!

## பினங்கு செட்டியார்கள் வர்த்தக சங்கம்

### 2-ம் வருட 3-வது நிர்வாக சபைக்கூட்டம்

நிகழும் யுவ வருடம் ஆவணி மாதம் 3உ 19—8—35 திங்கட்கிழமை மாலை 4-30 மணிக்கு கூட்டம் சங்கக்கட்டிடத்தில் தலைவர் திரு. மெ. ராம. அ. அண்ணமலை செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 15 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தார்கள்.

இரண்டாவது வருட இரண்டாவது நிர்வாக சபைக் கூட்டத்தின் நிகழ்ச்சிகளை வாசித்துக் காண்பிக்கப்பட்டு தலைவர் கையெழுத்து வாங்கப்பட்டது. பினங்கு ஆ. சொ. கடையிலிருந்து வந்த பிரவேசப் பத்திரம் வாசித்துக் காண்பிக்கப்பெற்று அங்கீகரிக்கப்பெற்றது. மெ. சித. அருணசலஞ் செட்டியார் என்ற பெயரில் அங்கத்தினராகப் பதிவு செய்யப்பெற்றிருப்பதை மெ. சித. சாத்தப்ப செட்டியார் என்ற பெயரில் பதிவு செய்துகொள்ளும்படி சாத்தப்ப செட்டியாரால் எழுதியனுப்பப்பெற்ற லெட்டர் வாசித்துக் காண்பிக்கப்பெற்று அதுபோல் பதிவு செய்துகொள்வதென தீர்மானிக்கப்பெற்றது. நம் சங்கத்தின் நிர்வாகக்கமிட்டி அங்கத்தினர்களில் ஒருவராகிய திரு. மு. ராம. சுப. வள்ளியப்ப செட்டியாரவர்கள் 8—8—35உ காலகதி அடைந்ததைக் குறித்து மிக வருந்துவதாகவும் அவர்களின் குடும்பத்தார்க்கு அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்வதென்றும் தலைவரவர்களால் அனுதாபத் தீர்மானம் கொண்டுவரப்பெற்று காரியதரிசியால் ஆமோதிக்கப்பெற்று ஏகமனதாக நிறைவேறியது. பினங்கு 111 நிர். கிட்டங்கியில் காலியான நிர்வாகசபை அங்கத்தினர் பதவிக்கு புதிய நிர்வாகசபை அங்கத்தினரை தேர்ந்தெடுக்கும்படி மேற்படி கிட்டங்கிக்கு லெட்டர் எழுதுவதெனத் தீர்மானிக்கப்பெற்றது. பழைய தமிழ் டைப்ரைட்டரை விற்று புதிய தமிழ் டைப்ரைட்டர் வாங்கும்படி காரியதரிசிக்கு அனுமதியளிக்கப்பட்டது. சந்தா கொடுக்காத கடைகளுக்கு லெட்டர் எழுதுவதென தீர்மானிக்கப்பெற்றது. நாகையில் கஸ்டம்ஸ் ஆபீசில் ஏற்பட்ட சில அசௌகரியங்களை முன்னிட்டு சில அன்பர்கள் நம் சங்கத்திற்கு எழுதியிருந்த லெட்டரை வாசித்துக் காண்பிக்கப்பட்டு அந்த விஷயத்தை இந்நாட்டிலுள்ள நம் சமூக சகோதர சங்கங்களுக்கு சுற்றறிக்கை மூலமாக அறிவித்துக் கொள்வதெனத் தீர்மானிக்கப்பெற்றது, நம் சங்கத்தைச் சேர்ந்த சில மெம்பர்களால் ஆரம்பிக்கப்படும் லிமிடெட் கம்பெனிக்கு நம் சங்கத்திலிருந்து செய்யக்கூடிய உதவிகளை செய்வதென தீர்மானிக்கபபெற்றது. எஸ். எஸ் கவர்மெண்டின் பொது ஸ்தாபனங்களில் நம் சங்கத்தின் சார்பாக ஸ்தானம் அளிக்க வேண்டுமென்று மறுமுறையும் கவர்ன்மெண்டார்க்கு எழுதுவதென்றும் தீர்மானிக்கப்பெற்றது. பினங்கு முனிசிபாலிடியாரால் மாதா மாதம் வெளியிடப்படும் விளம்பரப் புஸ்தகத்தில் நம் வேண்டுகோளுக்கு இணங்கி நம் சங்கத்தையும் சேர்த்து வெளியிட்டிருப்பதுபோல் தண்ணீர்மாமலை கோவிலை புகைப்படம் எடுத்து முனிசிபாலிடியார்க்கு அனுப்பி ஷை புஸ்தகத்தில் போடும்படி கேட்டுக்கொள்ளுவதென்றும் தீர்மானிக்கப்பெற்றது.

காரியதரிசியால் வந்தனேபசாரங் கூறப்பெற்று மாலை 6-30 மணிக்கு கூட்டம் இனிது நிறைவேறியது என்று அரு. வீர அருணசலஞ் செட்டிசார் (காரியதரிசி) அறிவிக்கிருர்.

### செட்டியார்களின் வர்த்தக பேராக் கிளைச்சங்கம் ஈப்போ

1935-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 11-ம் தேதி மாலை 6 மணிக்குக் கூடிய நிர்வாக சபைக்கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் செய்யப் பெற்றன. 9 அங்கத்தினர்கள் ஆஜராயிருந்தனர்.

வந்த கடிதங்களை வாசித்து ரிகார்டு செய்யப்பட்டது.

குவெட்டா பூகம்ப நிதிக்காக $ 25 நம் சங்கத்திலிருந்து நன்கொடை கொடுப்பதாகத் தீர்மானிக்கப் பெற்றது.

கணக்கு நாளது உ வரையில் வாசிக்கப்பெற்று, தலைவர் கையெழுத்து வாங்கப்பட்டது.

பொக்கிஷதாரராக திரு. உ. ராம. மெ. சுப. சேவு. வீரப்ப செட்டியாரவர்களை நியமிக்கப் பட்டிருக்கிறது. ஷெயார்களிடமிருந்து வருகிற தொகைக்கு பினங்கு நடப்பு வட்டி போட்டுக் கொள்ளுகிறது.

காரியதரிசி $ 100 க்குள் இருப்பு வைத்துக் கொள்ளுகிறதென்று தீர்மானிக்கப் பெற்றது.

திரு. சு. வயி. சாத்தப்ப செட்டியார் அவர்கள் தாய் நாடு செல்லும் பொழுது நம் கிளைச் சங்கத்துக்கு நன்கொடை தந்த $ 5ஐ வந்தனத்துடன் பெற்றுக் கொள்ளப் பட்டது.

டெலுக்ஆன்சனுக்கு திருவாளர் ராம. மெ. ராமசாமி செட்டியாரவர்களையும், திருவாளர் அ. வீர. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்களையும் நிர்வாக சபை மெம்பர்களாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறது. கோலகங்சாருக்கு திரு. க. கரு. கருப்பஞ் செட்டியாரவர்களையும், திரு. முத்து. மு. முத்தையா செட்டியாரவர்களையும் நிர்வாக சபை மெம்பர்களாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறது.

நம் சங்கத்தை பெல்பீல்ட்டு ஸ்திரீட்டுக்கு மாற்றுகிற விஷயமாக திரு. மெ. செ. அரசப்ப செட்டியாரவர்களும், திரு. வெ. அழ. அழகப்ப செட்டியாரவர்களும், வீடு சேவா பேசி முடிப்பதென்று தீர்மானிக்கப் பெற்றது.

பேங்குகளுக்கு, ஓவர்டிராப்ட்டு அக்கௌண்டுகளுக்கு வட்டியை தற்போது உள்ளதிலிருந்து குறைக்கும்படி கேட்டு லெட்டர் எழுதுவதென்று தீர்மானிக்கப் பெற்றது.

விலாச சம்பந்தமாக கேஸ் நடத்துவதற்கு பேரா சமஸ்தானத்திலுள்ள எல்லா ஊர் நகரத்தார்களுக்கும் சிலவுக்காக தொகை வசூலித்து அனுப்பும்படி லெட்டர் எழுதுவதென்று தீர்மானிக்கப் பெற்றது.

சானிடரி போர்டுக்கு ரோட்டுகளில் லைசென்ஸ் கொடுத்து வைத்திருக்கும் கடைகளில் சின்னக் கடைகளுக்கு மட்டும் லைசென்ஸ் கொடுக்கும்படிக்கும் பெரிய கடைகளுக்கு லைசென்ஸ் கொடுக்கிறதைத் தடுக்கும் படிக்கும் சென்ற போர்டுக்கு சிபார்சு செய்வதால் வீடு வைத்திருக்கிறவர்களுக்கு நன்மையாக இருக்குமென்று தீர்மானிக்கப் பெற்றது.

### இந்தோ சைனு செட்டியார்கள் சங்கம் செய்கோன்

#### 5-ம் ஆண்டு 7-ம் நிர்வாகசபைக் கூட்டம்

யுவ வருஷம் ஆடி மாதம் 20 ம் தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை 4 மணிக்கு ஐந்தாவது ஆண்டு ஏழாவது நிர்வாக சபைக் கூட்டம் சங்க நிலையத்தில் திரு. அ. ராம. வெ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தலைமையில் கூடியது. 16 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர்.

ஜுலை மாதத்து சங்கத்து நடவடிக்கை விபரங்கள் வாசித்து காண்பித்து அங்கீகரிக்கப்பெற்றன. 2. ஷை மாதத்துக்கணக்கு விபரங்கள் வாசித்துக் காண்பித்து ஒப்புக்கொள்ளப்பெற்றன. 3. அவுக்கா குஷே லைசன்ஸ் வரி (பத்தாவது) விஷயமாக எழுதின லெட்டருக்கு (1) 1929-ம் வருஷமுதல் 1935-ம் வருஷம் வரை எல்லா கடைகாரர்களும் கட்டியிருக்கும் பத்தாத்து தொகையையும் (2) நீண்ட நாள் தவணைக்குக் கடன் கொடுக்கும் காரியாலயம் (கிரதிஆலோக்தேர்ம்) மூலம் கடன் நிர்ணயச் சீட்டு (போம்பூர்) வாங்கிவரை தள்ளிக்கொடுத்த தொகை விபரத்தையும் (3) கிரதி ஆலோக்தேர்ம்மல்லாமல் 1933-ம் வருஷம் ஜுன் மாதம் முதல் 1935-ம் வருஷம் ஜுலைமாதம் வரை நாமே மனமுவந்து தள்ளிக்கொடுத்த உத்தேச தொகையையும் (4) இனங்களில் வசூலிக்க முடியாத நிலைமையில் பாக்கியாயிருக்கும் உத்தேச தொகைகளையும் தெரிவிக்கிறதென்று தீர்மானிக்கப் பெற்றது. 4. மேற்படி விஷயமாக ஆகஸ்ட் மாதம் 13-ம் தேதிக்குள் கணக்கு விபரங்கள் அனுப்பித்தாராதவூர்களுக்கு போய் வாங்கிவர திரு. பழ. கும. குமரப்ப செட்டியார் அவர்களையும் வெ. வீர. வேலப்ப செட்டியார் அவர்களை நியமிக்கப்பெற்றது. 5. சந்தா சம்பந்தமான விஷயங்களுக்கு நவராத்திரி காலத்தில் பொதுக்கூட்டம் கூடி முடிவு செய்கிறதென்று தீர்மானிக்கப் பெற்றது.

6. தேனீர் விருந்துகள் அதுபோன்ற மற்றவைகள் யாதாயினும் நிர்வாக சபைக் கூட்டத்தின் அனுமதிபெற்று செய்கிறதென்று தீர்மானிக்கப்பெற்றது. மிஸ்டர் விக்தோர் சின்னல் நன்கொடை அளிக்குமாறு அனுப்பின விண்ட்டை வாபீஸ் செய்துவிடுவதென தீர்மானிக்கப்பெற்றது.

சங்கத்தில் தற்சமயமிருக்கும் அன்னம் கார கிளர்க்கை விலகிவிட்டு ரிங்கி 25/–க்குள் வேறு ஆள் சேர்க்கிறதென்று தீர்மானிக்கப்பெற்றது.

பிறகு காரியதரிசி அவர்களால் வந்தனம் கூறப்பெற்று மாலை 7 மணிக்கு கூட்டம் இனிது நிறைவேறியதெனக் காரியதரிசி தெரிவிக்கிருர்.

## நோட்டீஸ்

தேவகோட்டை
சப் கோர்ட்டு

1935ஞ A. S. நிர். 25.

காவணக்கோட்டை N. குருசாமி அய்யர் } அப்பீல் வாதி

ஆவடையார் கோவில் மாணிக்கவாசக சுவாமி டிரஸ்டி ஸ்ரீ வைத்திலிங்க பண்டார சன்னதி அவர்கள் திருவாடுதுரை 1.
பெருவங்கோட்டையிலிருந்து சிலோனுக்குப்போயிருக்கும் சுப்பையா பிள்ளை மகன் இராமசாமி பிள்ளை 5.
தொண்டியிலிருக்கும் மகம்மது காசிம் குமாரர் சி. செ. மு. சைய்யது இப்ருகிம் 7.
} 1, 5, 7. அப்பீல் பிரதி வாதிகள்

ஷை 1, 5, 7, அப்பீல் பிரதிவாதிகளுக்கு அறிவிப்பது யாதெனில்.

இந்த அப்பீல் வாதி உங்கள்வகையரு பேரில் இராமநாதபுரம் டி. மு. கோர்ட்டு O. S. 7 of 33 நிம்பரில் பெற்ற டிகிரியின்பேரில் அப்பீல் செய்து அது தேவகோட்டை சப்கோர்ட்டுக்கு மாற்றப்பட்டு தங்களுக்கு நோட்டீசு உத்திரவாகி 14—9—35 வாய்தா யேற்பட்டிருக்கிறது. அந்த தேதியில் தாங்கள் ஆஜராகி எதிர்வாதம் இருந்தால் செய்துகொள்ளலாமென்பதை தெரிவிக்கலாயிற்று.

வாதி வக்கீல்
எஸ். வெங்கட்டருவ்,
30—8—35.

## மோட்டார் விபத்து

### தன் குற்றத்தை உணர்ந்த மோட்டார் ஓட்டி

(நமது நிருபர்)

காரைக்குடி, ஆகஸ்டு 29

சென்ற 27—8—35 மாலை 6—30 மணிக்கு திருப்பத்தூரிலிருந்து கீழச்சிவல்பட்டிக்கு "ஜனோபகார மோட்டார் சர்விஸ்" என்ற கார் போய்க் கொண்டிருக்கும்பொழுது திருப்பத்தூரிலிருந்து ஆறுவது மைலில் இரணியூர் விலக்கு ரஸ்தாவில் ஒரு பாலத்தில் மோதிக் கவிழ்ந்தது. வண்டியிலிருந்த பாசஞ்சர் சிலருக்கு மிக சொல்ப காயமேற்பட்டதைத் தவிர யாதொரு சேதமும் ஏற்படாமலிருந்தது மிக ஆச்சரியம். ஷெ காரை ஓட்டிவந்த கோவிந்த நாயர் என்ற டிரைவர் கீழே இறங்கி தன் கண்டக்டரை போலீசாரிடம் ரிப்போர்ட்டு செய்யும்படி கூறிவிட்டு கொஞ்சதூரம் சென்று பக்கத்திலிருந்த ஆலமரத்தில் தன் அங்கவஸ்திரத்தால் கழுத்தில் சுருக்கிட்டுத் தற்கொலை செய்துகொண்டான். சுருக்கிட்டுக் கொண்ட டிரைவரை ஆயிரக்கணக்கான மக்கள் பார்வையிட்டுச் சென்றனர். மோட்டார் டிரைவர்களில் இதுகாறும் தன் குற்றத்தையுணர்ந்த வீர புருஷன் இவனென்றே கூறலாம்.

## கண்டரமாணிக்கம் ரஸ்தாவில் வழிப்பறி.

(நமது நிருபர்)

காரைக்குடி, ஆகஸ்டு 29

சென்ற 27-8-35உ மாலை 6-30 மணிக்கு கண்டரமாணிக்கத்தில் கல் இறக்கிவிட்டு செம்பனூருக்குத் திரும்பிக் கொண்டிருந்த 5 வண்டிக்காரர்கள் வழியில் சில கள்வர்களால் வேல்கம்புகளால் தாக்கப்பட்டு அவர்களிடமிருந்த வண்டி வாடகை ரூ 5 களவாடப்பட்டதாக காரைக்குடி போலீஸிற்கு அவசரச் செய்தி கிடைத்திருக்கிறது.

## உதவிக்காக்ஷி

(நமது நிருபர்)

தேவகோட்டை, ஆகஸ்டு 29

சென்ற சில தினங்களாக உடற்பயிற்சிப் பிரசாரசபை நிதிக்காக தேவகோட்டையில் சாண்டோ சோமசுந்தம் செட்டியாரவர்கள் பார்வையில் நடைபெற்று வந்த பலசாலிகளின் உடற்பயிற்சிக் காக்ஷி ஆகஸ்டு 28உ மாலை 7 மணிக்கு சப் கலெக்டர் உயர்திரு. M. P. பாய் அவர்களின் வேண்டுகோளுக்கிணங்க, அன்னாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. இக்காக்ஷிக்காக வசூலான தொகை பூராவும் வைசிராய் குவெட்டா பூகம்ப நிவாரண நிதிக்கு அனுப்பப்படுமெனத் தெரிகிறது.

## காரைக்குடி மாணவர் சங்கம்

(நமது நிருபர்)

ஆகஸ்டு 24

காரைக்குடி மாணவர் சங்கத்தின் மாதாந்திரக் கூட்டம் சங்கத் தலைவர் திரு K. R. சீனிவாசய்யரவர்கள் தலைமையில் உள்ளூர் ஹைஸ்கூல் கட்டடத்தில் 24-8-35உ மாலை 6-30 மணிக்கு நடைபெற்றது. ஹைஸ்கூல் தலைமை உபாத்தியாயர் உயர்திரு N. S. வெங்கிட்டராமய்யர் அவர்கள் "நாம் இப்பொழுது என்ன நிலைமையிலிருக்கின்றோம்" என்பதுபற்றி ஆங்கிலத்தில் விரிவான சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். உபன்னியாசகர் அவருடைய சொற்பொழிவில் இத்தாலி-அபிசீனியத் தகராறுகளைப்பற்றியும், வரப்போகிற புதிய அரசியலில் காங்கிரஸ்காரர், ஜஷ்டிஸ் கட்சியார் இருவரும் ஸ்தாபனங்களைக் கைப்பற்ற முயன்றுவருவது பற்றியும் குறிப்பிட்டுப் பேசினர். வந்தனோபசாரத்திற்குப் பின் கூட்டம் முடிவுற்றது.

## சுந்தரபாண்டி பட்டணத்தில் கோர சம்பவம்

(நமது நிருபர்)

தேவகோட்டை ஆகஸ்டு 26

திருவாடானை போலீஸ் ஷரகத்தைச் சேர்ந்த சுந்தரபாண்டி பட்டணத்தில் சென்ற 23-8-35 பகல் 2-30 மணிக்கு மிக்க கோரமான சம்பவம் நடந்ததாகச் செய்தி கிடைத்திருக்கிறது.

ராவுத்துக் கண்ணி ராவுத்தர் மகன் P. K. R. அப்துல் காதர் என்பவர் 23-8-35உ பகல் 2-30மணிக்கு சுந்தரபாண்டி பட்டணத்திற்குத் தெற்குப்பக்கத்திலுள்ள முகைதீன் பள்ளி வாசல் ஓரமாகப் போய்க் கொண்டிருக்கையில் அவருடைய விரோதிகளான ஐந்து முஸ்லீம்கள் திடீரென அவரை வழி மறித்து தங்களிடத்திலுள்ள, பூணைகுத்தும் அம்பு, மடக்குக்கத்தி, சப்பட்டை சதுரக் கம்பிகள் இவைகளைக் கொண்டு அப்துல் காதருடைய தலை, முதுகு, முதலிய இடங்களில் வெட்டியும் குத்தியும் படுகாயப்படுத்திவிட்டு ஓடி ஒளிந்துவிட்டார்கள். இச்செய்தி திருவாடானைப் போலீசாருக்குத் தெரியவே, திருவாடானைப் போலீசார் எதிரிகளைக் கைதுசெய்து காவலில் வைத்திருக்கின்றனர். குத்துப்பட்டவர் திருவாடானை ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றுவருகின்றார். நிலைமை மிகவும் கவலைக்கிடமாக விருப்பதாகச் செய்தி கிடைத்திருக்கிறது. போலீசார் எதிரிகளின் பேரில் இ. பி. கோ. 148, 326-வது பிரிவுகளின்படி வழக்குப்பதிவு செய்திருக்கின்றனர்.

## இரவியமங்கலம் தீக் கொளுத்திய வழக்கு

### சேஷன்ஸிற்கு எதிரிகள் அனுப்பப் பட்டனர்

(நமது நிருபர்)

தேவகோட்டை ஆகஸ்டு 28

திருவாடானைப் போலீஸ் ஷரகத்தைச் சேர்ந்த பணக்கார இளைஞரான கார்மேகத் தேவரும் அவருடைய சகாக்களும் இரவியமங்கலத்திலுள்ள ஒரு வீட்டில் கலகம் செய்து நெருப்பு வைத்ததாகக் குற்றம் சாட்டப் பட்டு திருவாடானை சப்மாஜிஸ்ட்ரேட் திரு. அப்பாதுரை அவர்களால் இராமனாதபுரம் ஜில்லா செஷன்ஸ் கோர்ட்டிற்கு சென்ற மூன்று தினங்களுக்கு முன்பு அனுப்பப் பட்டனர்.

வழக்கின் விபரம்:— கார்மேகத் தேவனும் அவன் சகாக்களும், இரவியமங்கலம் கர்ணத்திற்கும் திருவேகம்பத்து ஹெட்மெனுக்கும் தாவாவிலுள்ள வயலில் அறுவடை செய்வதற்கு திருவேகம்பத்து ஹெட்மனுக்கு உதவி செய்வதாக ஒப்புக்கொண்டு அதன் பிரகாரம் தாவா வயலுக்குள் பிரவேசித்து நெல் அறுவடை செய்து கதிர்களைத் திருவேகம்பத்திற்குக் கொண்டு வந்துவிட்டனர். கர்ணத்தின் ஆட்கள் நெல் அறுவடை செய்ததை ஆக்ஷேபனை செய்யவே, கார்மேகத்தின் ஆட்கள் கோபமூண்டு இரவியமங்கலத்திலுள்ள கர்ணத்தின் வீட்டில் நெருப்பு வைத்து எரித்து விட்டனர். திருவாடானைப் போலீசார் இ. பி. கோ. 147, 379, 436 வது பிரிவுகளின்படி வழக்கைப் பதிவு செய்து சப் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் விசாரணை நடத்தியதின் பேரில், சப் மாஜிஸ்ட் அவர்கள் எதிரிகளை ஜில்லா செஷன்ஸ் கோர்ட்டிற்கு அனுப்பினார்கள். தீர்ப்புக் கூறின மாத்திரத்தில் கார்மேகம் சீக்காயிருப்பதாகக் கோர்ட்டில் தெரிவிக்கப்பட்டவுடன், எதிரி கார்மேகம் திருவாடானை ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகின்றான். இதர எதிரிகள் ஜில்லா ஜெயிலுக்கு அனுப்பப் பட்டிருக்கின்றனர்.



## நோட்டீஸ்

தேவகோட்டை சப்கோர்ட்டு

S. C. No. 216 of 1935.

கா. முரு. ராமசாமி செட்டியார்—வாதி

எழுவங்கோட்டை தாலுகா மங்கலம் கிராமத்திலிருக்கும் வெ. முத்து அம்பலம் மகன் M. வீரப்பனம்பலம் } பிரதிவாதி

ஷெ பிரதிவாதிக்கு நோட்டீஸ்:—

நீர் வாதிக்கு 8-4-1932ல் ரூ 320க்கு யெழுதிக் கொடுத்திருக்கும் புரோநோட்டுப்படி கூடுதலாகும் அசல் வட்டி தொகை ரூ 434—15—0யும் இவ்வியாஜ்யச் செலவையும் வரப்பற்ற ஷெ நிம்பரில் வியாஜ்ஜியம் செய்து ஷெ பிராது முடிவுக்காக 9—9—35ல் வாயிதா ஏற்பட்டிருக்கிறது. அன்று நீர் ஆஜராகாவிடில் பிராது எக்ஸ்பார்டியாகத் தீர்ப்புச் செய்யப்படுமென்று அறிவிக்கலாயிற்று.

K. Varadan,
வாதி வக்கீல்,
தேவகோட்டை,
30—8—35.

## நோட்டீஸ்

தேவகோட்டை சப்கோர்ட்டு

S. C. No. 285/35

எழுவங்கோட்டை தாலுகா ஒ. சிறுவயலிலிருக்கும் கா. ப. ராம. ராமன் செட்டியார் } வாதி

ஷெ தாலுகா வெற்றியூரிலிருக்கும் சுப்பிரமணியன் செட்டியார் குமாரர் ராம. சுப. நாராயணன் செட்டியார் } பிரதிவாதி

வாதிக்கு பிரதிவாதி ஆங்கிரஸ-ஆவணி வைகாசி மீ 19உ ரூபா 200-0-0 க்கு யெழுதிக் கொடுத்திருக்கும் புரோ நோட்டின்பேரில் வாதி வியாஜியம் செய்து பிரதிவாதிக்கு சமன்கள் யெடுத்துக் கொண்டு சார்வாகாமல் மறுவாயிதா 30-9-35உக்கு யேற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபனை யிருந்தால் அன்று வாயிதாவில் பிரதிவாதி கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளவேண்டியது. தவறினால் பிரதிவாதி எக்ஸ்பார்ட்டி செய்யப்படுவார் பென்று அறிவித்திருக்கிறது.

P. ராமசுவாமி அய்யர்,
வக்கீல்,
தேவகோட்டை,
31—8—35.

Printed and Published by N. VEERAPPAN for Dhana Vysian Company Ltd, at the Kumaran Power press Karaikudi. (S. INDIA)

